மலர் 13 இதழ் 274

NAVAMANI (Tamil Daily) MADRAS

4 பக்கம் 25 காசு

Regd M No. 7897

Phone No. 76190; 76198



# நவமணி

கூட்டுறவு முறையில் தொழிலாளர்கள் நடத்தும் ஒரே தமிழ்த தினசரி

சென்னை 18—6—75 புதன் வெளியூர் 19—6—75 வியாழன்

கடத்தல் மன்னர்கள் தவிப்பு

4-ம் பக்கம்

# ஆட்டோ ரிக்ஷா டாக்சி டிரைவர்கள் கோட்டைக்கு ஊர்வலம்

சென்னை, ஜூன் 18—டாக்சி-ஆட்டோ டிரைவர்கள் இன்று கோட்டைக்கு ஊர்வலமாகச் சென்றார்கள்.

குசேலர் தலைமையிலான டாக்சி—ஆட்டோ டிரைவர்கள் சங்கம் இந்த ஊர்வலத்தை நடத்தியது.

புதிதாக ஆட்டோ ரிக்ஷாக்களுக்கு லைசென்ஸ தரக்கூடாது என்று கோரி இந்த ஊர்வலம் நடத்தப்பட்டது.

ஊர்வலத்துக்கு முன்னாள் மேயர் கிருஷ்ணமூர்த்தி தலைமை வகித்தார். 800 பேர் ஊர்வலத்தில் கலந்துகொண்டதாக கிருஷ்ணமூர்த்தி கூறினார்.

மூர்மார்க்கெட்டிலிருந்து புறப்பட்ட இந்த ஊர்வலம் பாரிமுனையில் போலீசாரால் நிறுத்திவைக்கப்பட்டது.

பிரதிநிதிகள் மட்டும கோட்டைக்குச் செல்ல அனுமதிக்கப்பட்டனர்.

## மந்திரியுடன் சந்திப்பு

அவர்கள் தொழிலாளர் நல அமைச்சர் ராஜாராமிடம கோரிக்கை மனு ஒன்றைக் கொடுத்தனர்.

முதலமைச்சர் இல்லாததால் அவரது உதவியாளரிடம மனுவைக் கொடுத்தனர்.

மேற்கொண்டு தங்களது போராட்டத்தை எப்படி நடத்துவது என்பதை இன்று மாலை நடைபெறும கூட்டத்தில் தொழிலாளர்கள் முடிவு செய்வார்கள என்று தெரிகிறது.

# ஸ்டிரைக் சட்ட விரோதம்: அதிகாரி பேட்டி

சென்னை, ஜூன் 18—பேச்சு வார்த்தை நடந்து கொண்டிருந்தபோது பஸ ஊழியர்கள் வேலை நிறுத்தம ஆரம்பித்தது சட்டவிரோதம என்று போக்குவரத்து துறை செயலாளர் பாங்கோ இன்று நிருபர்களிடம கூறினார்.

அவர் மேலும சொன்னதாவது:—

வேலைநிறுத்தம்சட்டவிரோதம் என அரசு அறிவிக்கவில்லையே என்று தொழிற்சங்கத் தலைவர்கள் கூறுகிறார்கள். போக்குவரத்துத் துறை அத்தியாவசியப்பணியின் கீழ் வருகிறது.

வேலை நிறுத்தத்திற்கான நோட்டீசை 17-3-75ல் கொடுத்தார்கள். 6 வார காலத்துக்குள் வேலை நிறுத்தத்தை தொடங்கியிருக்க வேண்டும். அவர்கள் அப்படிச் செய்யவில்லை. இரண்டாவது நோட்டீசாவது அளித்திருக்க வேண்டும். அதையும் அவர்கள் தரவில்லை.

பேச்சுவார்த்தை நடந்து கொண்டிருக்கும்போது வேலை நிறுத்தத்தில் ஈடுபட்டது சட்ட விரோதமானதாகும,

பேச்சு வார்த்தை தோல்வி அறிக்கை என்று அதிகாரி அரசுக்கு அளித்தஒருவாரத்துக்குப் பிறகு தான் வேலை நிறுத்தம் செய்யலாம. ஆனால் இவர்கள் அதற்கு முன்னதாகவே துவக்கிவிட்டார்கள். எனவே வேலை நிறுத்தம சட்ட விரோதமானதாகும்'' என்றார் பாங்கோ.

## கல்வீச்சு

பெரமபூரில் பஸ்மீது கல்வீச்சு நடத்தியதாக துரைசாமி முதலிய 4 பேர்களும், அயனாவரத்தில் பஸ் ஊழியர்களை மிரட்டியதாக ஜோசப் முதலிய 3 பேர்களும் கைது செய்யப்பட்டதாக போலீஸ கமிஷனர் இன்று கூறினார்.

# சென்னையில் தடை உத்தரவு மேலும் நீடிப்பு

சென்னை, ஜூன் 18—சென்னை நகரில் இந்த மாதம் 15-ம் தேதி மாலையிலிருந்து 3 நாட்களுக்குப் பிறப்பிக்கப்பட்ட தடை உத்தரவு மேலும் 3 நாட்களுக்கு நீடிக்கப்பட்டிருக்கிறது

பஸ் தொழிலாளர் வேலை நிறுத்தத்தை ஒட்டி பிறப்பிக்கப்பட்ட இந்தத் தடை உத்தரவு 21-ந் தேதி மாலைவரை அமுலிலிருக்கும்,

# கடத்தல் படகு பிடிபட்டது

பம்பாய். ஜூன் 18—பம்பாய் நகரை அடுத்த கடலில் ஒரு அராபிய படகு பிடிபட்டது. 5 லட்சம ரூபாய் மதிப்புள்ள இந்த படகின் பெயர் ''அல் யாகூபி'' என்பதாகும.

துபாய் நாட்டிலிருந்து முதன் முதலாக இந்தியாவை நோக்கி வந்த அந்தப் படகை சுங்க அதிகாரிகள் பிடித்து சோதனையிட்ட தன்விளைவாக 10 லட்சம ரூபாய்மதிப்புள்ள கடத்தல் பொருள்கள் கைப்பற்றப்பட்டன.

கடைசி நேர சிக்கலுக்குப் பிறகு

# பாபுபாய் படேல் முதல்வராக பதவி ஏற்றார்

ஆமதாபாத். ஜூன் 18—குஜராத்தில் ஜனதா முன்னணி அரசின் முதல்வராக பாபுபாய் படேல் இன்று காலை 8.45 மணிக்கு பதவி ஏற்றார். மற்ற மந்திரிகள் நாளைய தினம பதவி ஏற்பர்.

முதல்வர் பாபுபாய் படேலுக்கு கவர்னர் கே.கே.விசுவநாதன் பதவிப் பிரமாணம் செய்து வைத்தார். பாபுபாய்படேல் கடவுளின் பெயரால் பிரமாணம் செய்தார்.

சர்வோதய இயக்கத் தலைவரான ரவிசங்கர் மகராஜ், தேர்தலில் ஜனதா முன்னணிக்கு தலைமைவகித்து வெற்றித்தேடிக்கொடுத்த மொரார்ஜி தேசாய் ஆகியோர் புதிய முதல்வர் பாபுபாய் படேல். கவர்னர் விசுவநாதன் ஆகியோருடன்மேடையில் உட்கார்ந்திருந்தனர்.

## கடைசிநேர சிக்கல்

இன்று காலை பதவி ஏற்பு வைபவம் நடைபெறுமோ என்று தோன்றும் அளவுக்கு நேற்று இரவு கடைசி நேர சிக்கல் ஏற்பட்டது. புது காங்கிரஸ் கட்சியினர் திரைமறைவில் செய்த காரியங்களும், சில விரும்பத்தகாத நடவடிக்கைகளுமே இதற்குக் காரணம்.

பதவி ஏற்பு வைபவத்துக்கான அழைப்பிதழ்கள் நள்ளிரவுக்கு மேல்தான் அனுப்பப்பட்டன.

பிறகு இன்று காலை பதவி ஏற்பு வைபவம் நடந்தது

ப. உ. ச. மீது விசாரணை

# டி. வி. அந்தோணிக்கு சம்மன்: விசாரணை கமிஷன் உத்தரவு

சென்னை ஜூன் 18—அரிசி பேர ஊழல் சம்பந்தமாக விசாரிக்கும் விசாரணை கமிஷன் முன்பாக சாட்சியம் அளிக்க சென்னைமாநகராட்சி விசேஷ அதிகாரியாகப் பணியாற்றும்டி.வி அந்தோணிக்கு சம்மன் அனுப்ப நீதிபதி ராமபிரசாத் ராவ் உத்தரவிட்டார்.

இந்த விசாரணைக்கு உட்பட்ட சம்பவங்கள் நடந்த காலத்தில் டி.வி. அந்தோணி தஞ்சை மாவட்ட கலெக்டராக இருந்தார். எனவே தான் விசாரணைக் கமிஷன் முன்பாக சாட்சியம் அளிக்க அவருக்கு சம்மன் அனுப்ப உத்தரவிடப்பட்டது.

அரிசிபேர ஊழல் விவகாரத்தில் அமைச்சர் ப. உ சண்முகத்துக்குதொடர்புஉண்டா என்பதுபற்றிய இந்த விசாரணையில் இன்று 5-வது நாளாக அப்போதைய உணவுத்துறை செயலாளர் ராமசந்தர் தொடர்ந்து சாட்சியமளித்தார்.

அவரை கமயூனிஸ்டு கட்சி சார்பிலான வழக்கறிஞர் பால்பாண்டியன் தொடர்ந்து குறுக்கு விசாரணை செய்தார்.

பால்பண்டியன் கேட்ட கேள்விகளுக்குப் பதிலளித்து ராம்சந்தர் கூறியதாவது;—

தஞ்சை மாவட்டததில் 1½ லட்சம் டன் அரிசி கொள் முதல் செய்ய திட்டமிடப்பட்டிருந்தது. இதில் 40 ஆயிரம் டன் அரிசியை தஞ்சாவூர் கூட்டுறவு மார்க்கெட்டிங் பெடரேஷன் கொள்முதல் செய்ய ஒப்புக்கொண்டது. பெடரேஷன் கொள்முதல் செய்த நெல், கலெக்டரின் கட்டுப்பாட்டின் கீழ் இல்லை. பெடரேஷனின் கையில்தான் இருந்தது. பெரிய கருப்ப நாடார் முகமது அஷ்ராபி அண்ட் கம்பெனி ஆகிய இருவரும் பணம் கட்டியபிறகு அவர்களுக்கு நெல்லை பெடரேஷனிலிருந்து டெலிவரி கொடுக்குமபடி கலெக்டர் உத்தரவிட்டார்.

இதே விதிமுறை தாண்டவராயனிடத்திலும பின்பற்றப்பட்டதா என்பதை தஸ்தாவேஜுகளைப் பார்த்துத்தான் சொல்ல இயலும.

இவ்வாறு அவர் கூறினார்.

## சம்மன் அனுப்ப உத்தரவு

அப்போது தஞ்சை மாவட்டத்தின் கலெக்டராக யார் இருந்தார்கள் என்று நீதிபதி கேட்டதற்கு 'டி. வி. அந்தோணி கலெக்டராக இருந்தார்' என்று ராம்சந்தர் சொன்னார்.

இந்த விசாரணையில் சாட்சியமளிக்க டி. வி. அந்தோணிக்கு சம்மன் அனுப்புமாறு நீதிபதி உத்தரவிட்டார்.

பஸ் ஊழியர் பிரச்னை

# மந்திரியிடம் முறையீடு

## தொழிற்சங்க தலைவர்கள் சந்தித்து பேசினார்கள்

சென்னை, ஜூன் 18—அரசு பஸ் ஊழியர் போராட்ட கமிட்டி உறுப்பினர்கள் இன்று கோட்டையில் தொழிலாளர் நல அமைச்சர் ராசாராமை சந்தித்தனர்.

சி.ஐ.டி.யூ. வை சார்ந்த தலைவர்களான வி. பி.சிந்தன் மன்னார்சாமி, அண்ணாதொழிலாளர் முன்னேற்ற சங்கத் தலைவர் ராகவானந்தம், ஏ.ஐ.டி.யூ.சி யைச் சேர்ந்த கோபு. தேசிய தொழிலாளர் சங்கத் தலைவர் திருப்பெருந்துறை ஆகியோர்கள் பஸ் ஊழியர் வேலை நிறுத்தம் பற்றி அமைச்சரிடம நிலைமையை விளக்கியதாகத் தெரிகிறது.

அரசு பஸ் ஊழியர்களின் வேலைநிறுத்தம் சட்டபூர்வமானது என்று அமைச்சர் ராசாராமிடம் அவர்கள் விளக்கினர். வேலைநிறுத்தம் சட்டபூர்வமானதுஎன்பதால் ஸ்டிரைக் செய்யும் ஊழியர்களை கைது செய்வதும் சஸ்பெண்டு செய்வதும் ஊர் மாற்றம் செய்வதும் சரியல்ல என்று அமைச்சரிடம் போராட்டக்கமிட்டி உறுப்பினர்கள் கூறியதாகத் தெரிகிறது.

அரசின் இவ்வித நடவடிக்கைகள். ஸ்டிரைக் செய்ய தொழிலாளர்களுக்கு உள்ள உரிமையை பறிப்பது போலாகும் என்றும் வன்முறையாளர்களை பஸ வண்டியில இலவசமாக பயணம் செய்ய அனுமதித்து இருப்பது சரியல்ல எனறும அமைச்சர் ராசாராமிடம அவர்கள் எடுத்துச் சொன்னதாகக் கூறப்படுகிறது.

ஸ்டிரைக் செய்யும் பஸ் ஊழியர்களில் இதுவரை சுமார் 1200 பேர் கைது செய்யப்பட்டிருப்பதாகவும் 1700 பேர் சஸ்பெண்டு செய்யப்பட்டிருப்பதாகவும் 250 பேர் ஊர்மாற்றம் செய்யப்பட்டிருப்பதாகவும் தெரிகிறது.

# போராட்ட குழு அறிக்கை

சென்னை. ஜூன் 18—அரசாங்க பஸ்ஊழியர்களை அரசு கைது செய்துள்ளதும், சஸ்பெண்டு செய்திருப்பதும் வஞ்சிப்பதுபோல் உள்ளது என்று பஸ ஊழியர் போராட்டக் குழு புகார் கூறியுள்ளது.

சென்னையில் நேற்றிரவு எஸ். திருப்பெருந்துறை (புது காங்கிரஸ்) தலைமையில் நடந்த பஸ் தொழிலாளர் போராட்டக் குழுக் கூட்டத்தில் ஏ. எம். கோபு (ஏ ஐ டி யு சி). எஸ். ராகவானந்தம் (அண்ணா தொழிலாளர் முன்னேற்ற சங்கம்), வி. பி. சிந்தன் (சி ஐ டி யூ), என். எம். மணிவர்மா (தேசிய தொழிலாளர் சங்கம்) ஆகியோர் கலந்து கொண்டனர்.

கூட்டத்தில் கீழ்க்கண்ட முடிவுகள் எடுக்கப்பட்டன.

'பல்லவன போக்குவரத்துக் கழகத்தினரால் தொழிலாளர் அல்லாத தி. மு. க. சார்புடைய சமூக விரோத நபர்களுக்கு ஆயிரத்துக்குமேலான இலவச அனுமதி அட்டைகள் வழங்கப்பட்டு எந்த வழித்தடத்தில் எத்தனை தடவைகள் வேண்டுமானாலும் இலவச பஸ் சவாரி செய்ய ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது.

இவர்களில் பலரிடம் பயங்கர ஆயுதங்கள் இருக்கின்றன வண்டிகளின் பாதுகாப்புக்காக போலீசார் செல்லும்போது இந்தப் பேர்வழிகளும் கூடபபோவது ஏன் எனறு நியாய உள்ளம படைத்தவர்கள் சிந்தித்துப்பார்க்க வேண்டியுள்ளது.

ஆளுங்கட்சியின் ஆதரவை பெற்ற சங்கத தினா நிர்வாகத்திற்கு ஒத்து ஊதும் போக்கை தட்டிக் கேட்க முன்வரும் மற்ற சங்கங்களின் பேரம்பேசும் உரிமையை பலாத்காரத்தின் மூலம் ஒடுக்கும் உள்நோக்கத்துடன் தான் இத்தகைய அநாகரிக முறை கடைப்பிடிக்கபடுகிறது.

மறியலில் பங்குகொள்ளாத பல தொழிற்சங்க ஊழியர்களையும் தேடிப்பிடித்து கைது செய்யும் படலம், இப்போது ஆரம்பம் ஆகியுள்ளது.

## வஞ்சம் தீர்ப்பதா?

ஆளுங்கட்சியினரின் சங்கத்தவர் கொடுக்கும் பட்டியலில் கண்ட எதிர்சங்க ஊழியர்களை சிறைபிடிக்கும் கேவல

(7-ம் பத்தி பார்க்க)

# சென்னை நகரில் 24 பேர் கைது

சென்னை, ஜூன் 18—சென்னை நகரில் அரசு பஸ் ஊழியர்கள் இன்று இரண்டாவது நாளாகமறியல்போராட்டம நடத்தினார்கள் அதன் காரணமாக 24 பேர் கைது செய்யப்பட்டனர்.

எகஸ்பிரஸ் பஸ நிலையத்திற்கு அருகே அவர்கள் போராட்டம்நடத்தினார்கள்.

ஹனீபா (சி ஐ டி யூ.) சிவபெருமான் (அண்ணா முன்னேற்றதொழிலாளா சங்கம்) ஜோதி (பழைய காங்கிரஸ) ஆகியோர் தலைமையில்இந்தப் போராட்டம் நடந்தது. தடைஉத்தரவை மீறியதாக அவர்கள் மீது குற்றஞ்சாட்டப்பட்டுள்ளது.

## அம்பத்தூரில் 5 பேர் கைது

அம்பத்தூரில் சி ஐ டி யூ. தொழிற்சங்கத்தைச் சேர்ந்த பாலசுப்பிரமணியம தலைமையில் மறியல் போராட்டம நடந்தது. அவர் உள்பட 5 பேர் கைதுசெய்யப்பட்டனர்.

கோவையில் இன்று கூட அரசு பஸ்கள் ஓடவில்லை.

குமாஸ்தாக்களின் போராட்டம இன்று இரண்டாம நாளாக நடந்தது.

அ. தி. மு. க. அறிவிப்பு

# 24-ந் தேதி கோவையில் கருணாநிதிக்கு கறுப்புக்கொடி

சென்னை, ஜூன் 18—தமிழக முதல்வர் கருணாநிதி கோவை நகருக்கு இந்த மாதம் 24ந்தேதியன்று வரும்போது அவருக்கு அண்ணா தி மு க சார்பில் கறுப்புக்கொடி காட்டப்படும். இந்த தகவலை அண்ணா திமுக-வின் கறுப்புக்கொடி போராட்டக் குழு தலைவர் எஸ். டி. சோமசுந்தரம இன்று சென்னையில் விடுத்த அறிக்கையில் வெளியிட்டார்.

24-ந் தேதி காலை 6 மணிக்கு கோவை நகரிலும 8 மணிக்கு பொள்ளாச்சி நகரிலும கருணாநிதிக்கு அதிமுக ஊழியர்கள் கறுப்புக்கொடி காட்டுவார்கள் என்று அந்த அறிக்கையில் கூறப்பட்டிருக்கிறது.

# புடவை ஆசையால் தங்க சங்கிலியை பறிகொடுத்து தவித்த கிழவி

பாண்டிச்சேரி ஜூன் 18—மலிவு விலைக்கு உயர்ந்தாக புடவை வாங்கித் தருவதாகக் கூறிய மர்ம ஆசாமி ஒருவனிடம் ஒரு கிழவி தனது தங்கச் சங்கிலியை பறிகொடுத்தார்.

பாண்டிச்சேரி காமாட்சி அம்மன் தெருவைச் சேர்ந்தவர் ராஜாம்பாள் (வயது 85) தனது வீட்டுக்கு காய்கறி வாங்க அவர் சென்றபோது எதிரே ஒரு ஆசாமி வந்தார்.

'காந்தி வீதியில் மலிவு விலைக்கு உயர்ந்த சேலைகள் கொடுக்கிறார்கள் ஏழைகளுக்குத்தான் விலை மலிவாகக் கொடுப்பார்கள். ஆகையால் கழுத்தில் கிடக்கும் நகையைக் கழட்டிக் கொடுத்து விடு' என்று ராஜாம்பாளிடம் அவர் கூறினாராம்.

ராஜாம்பாள் அந்த ஆசாமியின் பேச்சை நம்பி ரூ. 3 ஆயிரம் மதிப்புள்ள 8 பவுன் தங்கச் சங்கிலியைக் கழட்டிக் கொடுத்துவிட்டதாகக் கூறப்படுகிறது.

அந்த ஆசாமி ராஜாம்பாளை அழைத்துக்கொண்டு கிழவீதியில் விட்டுவிட்டு எங்கோ மறைந்துபோய் விட்டான்.

ராஜாம்பாள் போலீசில் புகார் செய்துள்ளார். புடவை ஆசை காட்டி தங்கச் சங்கிலியை அபேஸ் செய்த மர்ம ஆசாமியை போலீசார் தேடிவருகின்றனர்.




மக்கள் சபையை கூட்டக் கோரி

# சபாநாயகரை சந்திக்க எதிர்க்கட்சி முடிவு

புதுடெல்லி, ஜூன் 18—அலகாபாத் ஹைகோர்ட் தீர்ப்புக்குப் பிறகு பிரதமர் பதவியிலிருந்துவிலக இந்திரா காந்தி மறுப்பதால் ஏற்பட்டுள்ள நிலைமை பற்றி விவாதிக்க மக்கள் சபையை உடனே கூட்டவேண்டும என்று சபாநாயகரிடம் கோரிக்கை விடுப்பதற்காக கம்யூனிஸ்டல்லாத எதிர்க்கட்சித் தலைவர்கள் வருகிற 21-ந் தேதி சபாநாயகரை சந்திப்பர்.

இத் தகவலை ஜனசங்கத் தலைவர் வாஜ்பாயி இன்று தெரிவித்தார்.

5-ம் பத்தி தொடர்ச்சி

மான காரியத்தில் போலீஸ் இறங்கியிருப்பது ஜனநாயக வாதிகளின் கண்டனத்துக்குரிய செயலாகும். இதுவரை சுமார் 2 ஆயிரம் தொழிலாளர்களை 'சஸ்பெண்ட் செய்தும்' கிட்டத்தட்ட 1,300 பேரை கைது செய்தும இருப்பது சாதாரண தொழில் தகராறை முறையான சமரச வழியில் தீர்ப்பதற்கு மாறாக அரசியல் வஞ்சம் தீர்க்கும் விதத்தில் அரசு முனைந்து நிற்பதாகவே எண்ண இடமளித்துள்ளது.

தானும், தனது ஆதரவாளர்களும் மேற்கொள்ளும் வன்முறைச் செயலகளை திரையிட்டு மறைத்து விட்டு, அதற்கான பழியை பொறுமையோடு போராடும் தொழிலாளர்கள்மீது சுமத்த அரசு தரப்பு மூலம் கட்டுக்கதைகளை பரபபப்படுவதை யாரும் நம்பி ஏமாற மாட்டார்கள் என்பதில் எங்க நம்பிக்கை உண்டு.

## போராட்டம் தொடரும்

கைதானவர்களை நிபந்தனையின்றி விடுதலை செய்து, ஊர் மாற்ற சஸ்பெண்ட் உத்தரவுகளை வாபஸ் பெற்ற சமரசப் பேச்சுவார்த்தை நடத்தி பரஸ்பரம் விட்டுக் கொடுத்து நியாயமான தீர்வுகாண அரசு முனவரும் வரை வேலை நிறுத்தத்தில் ஈடுபட்டுள்ள தொழிலாளர்களின்போராட்டமும், மறியல் கிளர்ச்சியும் தொடர்ந்து நடக்கும்வெறும் சாதாரண தொழில் தகராறை ஏதோ தனது ஆட்சிக்கு எதிராக தொடுக்கப்பட்டுள்ள போராட்டமாக வீணாகக் கற்பனை செய்துகொண்டு அரசியல் காழ்ப்புணர்ச்சியோடு அரசின் அதிகாரங்களைத் தவறாகம் பிரயோசித்து வேலைநிறுத்தத்தை உடைக்கும் வேலையில் அரசு நினைத்து இருப்பதால்தொழிற்சங்க உரிமைகளைப்பாதுகாக்கும் பொருட்டு அனைத்து அரசியல் கட்சிகளின் ஆதரவையும் நாடவும் நாங்கள் நிர்பந்திக்கபட்டிருப்பதை நாங்கள் தெரிவித்துக கொள்கிறோம்'' என்று தீர்மானங்களில் கூறப்பட்டுள்ளது.

## காமராஜருடன் சந்திப்பு

போராட்டக் குழு உறுப்பினர்கள் நேற்று மாலை பழைய காங்கிரஸ தலைவர் காமராஜ். இந்திய கம்யூனிஸட கட்சியின் தமிழ் மாநில பொறுப்புச் செயலாளர் பா. மாணிக்கம ஆகியவர்களையும தனித்தனியாக சந்தித்து போராட்ட நிலைமைகளை விளக்கிச்சொல்லி ஆதரவு கோரினர்

இன்று காலை 10 மணிக்கு தொழிலாளர் நல அமைச்சர் ராஜாராமை சென்னை கோட்டையில் போராட்டக் குழு உறுப்பினர்கள் சந்தித்தனர்.




**வியாழன், ஜூன் 19**

**சென்னை-1**
(416.7 மீ)

**காலை**

5-55 வந்தே மாதரம்
6-05 குறளமுதம்
6-10 வழிபாட்டிசை
6-30 இசையமுதம்
7-09 தமிழ்மணம்
7-25 மீண்டும் கேட்போம்
7-45 திரைப்பாடல்கள்
8-00 எம். கல்பகம் —பாட்டு
9-15 திரைப்பாடல்கள்
9-30 முடிவு

**பகல்**

12-02 ஏ. லலிதா பிச்சுமணி —பாட்டு
12-50 மெல்லிசை
1-00 திரைப்பாடல்கள்
1-30 மீனாக்ஷி சோமசுந்தரம் —வீணை
2-10 இசைத்தட்டு
2-30 மீனாக்ஷி சோமசுந்தரம் —வீணை
3-00 முடிவு

**மாலை**

5-00 ஒலிக்கதிர்
5-10 டி. எஸ். வேம்பு ஐயர் —பாட்டு
6-05 திரைப் பாடல்கள்
6-15 வாத்திய இசை
6-55 காவல்துறை செய்தி
7-00 திரைப் பாடல்கள்
7-25 விவசாயிகளுக்கு
8-00 எஸ். தண்டபாணி —ஜலதரங்கம்
8-45 செந்தளிர்
9-15 சம்ஸ்கிருத நிகழ்ச்சி
9-30 நாடகம்
10-00 திருச்சி அஞ்சல்)
10-30 திரைப்பாடல்கள்
11-05 வானிலை—முடிவு

**சென்னை - 2**
211.3 மீ)

**காலை**

5-55 வந்தேமாதரம்
7-00 செய்திகள் (ஆங்கிலம்)
7-15 மெல்லிசை
7-25 ஏ. லலிதா பிச்சுமணி —பாட்டு
9-00 சம்ஸ்கிருதச் செய்தி
9-05 கடிதம் (ஆங்கிலம்)

**பகல்**

12-40 மேற்கத்திய இசை
1-30 மாதர் நிகழ்ச்சி (தெலுங்கு)
2-00 முடிவு

**மாலை**

4-15 ஸ்போர்ட்ஸ்
5-50 திரை மெட்டுகள்
6-00 மேற்கத்திய இசை
6-30 & 7-15 இளைய பாரதம்

**இரவு**

8-00 ஸ்போர்ட்ஸ்
8-05 இளையபாரதம்
8-15 டெல்லி அஞ்சல்
8-25 அஞ்சலி
9-00 வாத்திய விருந்து
9-15 ஸ்பாட் லைட்
9-50 மேற்கத்திய இசை
11-05 முடிவு

**திருச்சி**
(319. மீ)

**காலை**

6-00 வந்தேமாதரம்
6-10 நெறிவிளக்கம்
6-15 பாமாலை
6-30 விவசாயிகளுக்கு
6-35 துதிப்பாடல்கள்
7-00 தாளக்கோலம்
7-25 தேவாரப் பயிற்சி
7-35 கே. அங்குசாமி —பாட்டு
8-20 இசைத்தட்டு

**பகல்**

12-02 திரை இசை
12-50 தேசபக்திப் பாடல்கள்
1-00 வாத்திய கோஷ்டி
1-30 கே. அங்குசாமி —பாட்டு
2-10 நலம்பட வாழ்வோம்
2-15 வண்ணச்சுடர்
2-30 வானிலை, முடிவு

**மாலை**

5-30 தாளவாத்தியக் கச்சேரி
6-10 திரை இசை
6-40 கிராம நிகழ்ச்சி
7-25 விவசாயிகளுக்கு
8-05 இளையபாரதம்
9-15 இக்கட்டு இவர் பணி —பேச்சு
9-30 ஒலிச்சித்திரம
10-30 ஒபரப்பு முடிவு

சென்னை 1-ல் தமிழில் செய்தி காலை 7-15, 12-40, மாலை 7-15.

ஆங்கிலத்தில் செய்தி பகல் 12-00, மாலை 2-00, 6-00, இரவு 9-00. மாநிலச்செய்திகள் பகல் 12-30, 6-30.

திருச்சி: தமிழில் செய்தி காலை 7-15, 12-40, மாலை 7-15

ஆங்கிலத்தில் செய்தி: காலை 8-10, 12-00, 2-00, 6-00, 9-00.

விவிதபாரதி: இரவு 9-15 "ஆபீஸா வீடா?" (தொடர் நாடகம்-3)

# குஜராத் முதல்வர் வாழ்க்கை குறிப்பு

குஜராத்தின் புதிய முதல்வராகப் பதவி பெற்றுள்ள பாபுபாய் படேலுக்கு 65 வயதாகிறது. ஜனதா முன்னணி அரசுக்குத் தலைமை வகிக்கும் அவர் பழைய காங்கிரஸ் கட்சியைச் சேர்ந்தவர். அவர் குஜராத் மாநில பழைய காங்கிரஸ் கமிட்டியின் தலைவர். பாபுபாய் படேல் அரசாங்கத்திலும், பொது வாழ்விலும், நல்ல நிர்வாக அனுபவமுள்ளவர்.

பிரிட்டிஷ் ஆட்சியின்போது சுதந்திரப் போராட்டத்தில் பங்கு கொண்டவரான பாபுபாய் படேல் 19-வது வயதில் அரசியலில் குதித்து 7 தடவை சிறை சென்றார். "வெள்ளையனே வெளியேறு" இயக்கத்தின்போது அவர் இரண்டரை ஆண்டு சிறைவாசம் அனுபவித்தார்.

பாபுபாய் படேல் குஜராத்தில் கைரா மாவட்டத்தில் உள்ள நாதியாத் நகரில் 1911-ம் ஆண்டு பிப்ரவரி 9-ந் தேதி பிறந்தார். நாதியாதில் ஆரம்பக் கல்வியைப் பெற்ற அவர் பின்னர் புனாவிலும், பம்பாயிலும் படித்து 1937ம் ஆண்டில் சட்டப் படிப்பை முடித்து அதில் பட்டம்பெற்றார்.

அதே ஆண்டில் அவர் 26-வது வயதில் பம்பாய் மாகாண சட்டசபை உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். 1946ம் ஆண்டில் மீண்டும் தேர்ந்தெடுக்கப்பட்டார். அப்போதைய முதல்வரான காலஞ்சென்ற பி. ஜி. கெர்ருக்கு 1949ம் ஆண்டு முதல் 1952 வரை பார்லிமெண்டரி காரியதரிசியாக இருந்தார். 1952ம் ஆண்டிலிருந்து 1956 வரை துணை மந்திரியாக இருந்தார். பின்னர் 1957 வரை மின்சார வீட்டுவசதி மந்திரியாக இருந்தார்.

1960ம் ஆண்டில் குஜராத் மாநிலம் அமைக்கப்பட்டபோது 1967லிருந்து 1971ம் ஆண்டு வரை ஹிதேந்திர தேசாய் மந்திரி சபையில் மந்திரியாக இருந்தார்.

பாபுபாய் படேல் கடந்த 20 ஆண்டுகளாக நாதியாத் கல்விச் சங்கத்தின் தலைவராகவும், 1965லிருந்து சர்தார் வல்லபாய் சமாஜ் சேவா டிரஸ்டின் நிறுவன டிரஸ்டியாகவும் துணைத்தலைவராகவும் இருந்துவருகிறார்.

1958ம் ஆண்டிலிருந்து 1961 வரை அவர் சர்தார் படேல் பல்கலைக் கழக துணை வேந்தராகப் பதவி வகித்தார்.

1957ல் பம்பாய் விற்பனைக் கமிட்டியின் தலைவராகவும், 1960 முதல் 1967 வரை குஜராத் கதர் போர்டின் தலைவராகவும், 1963 முதல் 1967 வரை குஜராத் கனிவள அபிவிருத்தி கார்ப்பரேஷனின் தலைவராகவும் இருந்தார் குஜராத்மாநில நிர்வாகப்பிரச்னைகள் குழுவின் தலைவராகவும், குஜராத் கதர் கமிஷன் நிர்வாக அபிவிருத்தி கமிட்டி தலைவராகவும் இருந்திருக்கிறார். 1965ல் குஜராத்தொழில் அபிவிருத்தி கார்ப்பரேஷனின் துணைத் தலைவராகவும் இருந்திருக்கிறார்.

தற்போது அவர் அமுல் பால்பண்ணை நிறுவனம், சர்தார் வல்லபாய் சமாஜ் சேவா டிரஸ்ட், நாதியாத் கல்வி சங்கம், சர்தார்படேல் பல்கலைக் கழகம், சர்வோதய டிரஸ்ட் ஆகியவற்றின் தலைவராக இருந்து வருகிறார்.

பொதுவாழ்க்கையில் காந்திய நெறிமுறைகளைக் கடைப்பிடிப்பதில் முன்னுதாரணமாகத் திகழ்பவர் என்றுபாபுபாய் படேலை ஒரு சமயம், குஜராத் முன்னாள் கவர்னர் நித்யானந்த கனுங்கோ பாராட்டினார் என்பது குறிப்பிடத்தக்கது.

## குஜராத் கூட்டணி ஆட்சி

# மொரார்ஜிக்கு புதுகாங்கிரஸ் எம். பி.க்கள் கேள்வி

புதுடெல்லி, ஜூன் 18—ஊழல்காரர்கள் என்று குற்றஞ்சாட்டப்பட்டவர்களை மந்திரி சபையில் எப்படி சேர்த்துக் கொண்டீர்கள் என்று, மொரார்ஜி தேசாயை புது காங்கிரஸ் எம். பி.க்கள் கேட்டிருக்கின்றனர்.

புது காங்கிரஸ் எம் பிக்கள் 21 பேர் புதுடெல்லியில் வெளியிட்ட அறிக்கை ஒன்றில் கூறியிருப்பதாவது:—

முன்பு சிமன்பாய் பட்டேல் ஆட்சி ஊழல் ஆட்சி என்று கூறி, மொரார்ஜி தேசாய் உண்ணாவிரதம் இருந்து அவரது அமைச்சரவையை வீழ்த்தினார்.

சமீபத்தில் நடந்த தேர்தல் பிரச்சாரத்தின போதுகூட சிமன்பாய் பட்டேல் கட்சியுடன் எந்தவித உடன்பாடும் செய்துகொள்ளமாட்டோம் என்று ஜனதா முன்னணியினர் மக்களை நம்ப வைத்தனர்.

ஆனால் இப்போது சிமன்பாய் பட்டேலின் கட்சியைச் சேர்ந்த இரண்டு பேரை அமைச்சரவையில் சேர்த்துக் கொள்ள அவர்கள் முடிவு செய்துள்ளனர்.

எந்தவிதமான பொதுக் கொள்கையும் இல்லாமல் செய்யப்பட்டிருக்கும் இந்தச் சந்தர்ப்பவாதக் கூட்டணி, மக்களுக்கு எப்படி சேவை செய்யப் போகிறது என்பதைப் பார்க்கத்தான் போகிறோம்,

எந்தக் கொள்கை. அல்லது தார்மீகஅடிப்படையில் சிமன்பாய் பட்டேலுடன் கூட்டு வைத்துக்கொள்ளப்பட்டிருக்கிறது என்பதை ஜனதா முன்னணித் தலைவர் மொரார்ஜி தேசாய் விளக்குவார் என்று கருதுகிறோம்.

மேற்கண்டவாறு அந்த அறிக்கையில் கூறப்பட்டிருக்கிறது.

## ப. காங்கிரஸ் காரிய கமிட்டி: காமராஜர் போகமாட்டார்

சென்னை, ஜூன் 18—இம்மாதம் 21, 22 தேதிகளில் டெல்லியில் நடக்க இருக்கும் பழைய காங்கிரஸ் கட்சியின் காரியக்கமிட்டிக் கூட்டத்தில் காமராஜர் கலந்து கொள்ள மாட்டார்.

தமிழ்நாடு காங்கிரஸ் தலைவர் பி. ராமச்சந்திரன் மட்டும் அந்தக் கூட்டத்தில் கலந்து கொள்வார்,

காமராஜர் அந்தக் கூட்டத்தில் கலந்துகொள்ளப் போகாமல் இருப்பதற்குக் காரணம் அவர் தொடர்ந்து தமிழகத்தில் சுற்றுப்பயணம் செய்வதுதான்என்று கூறப்படுகிறது.

வருகிற தேர்தலுக்கு வாக்காளர்களைத் தயார் படுத்த தமிழகம் முழுவதும் சுற்றுப் பயணம் செய்து வருகிறார். அந்த திட்டத்தின்படி இம்மாதம் 21, 22 தேதிகளில் செங்கை மாவட்டத்தில் காமராஜர் சுற்றுப்பயணம் செய்ய இருக்கிறார். பல்வேறு இடங்களில் காமராஜரிடம் தேர்தல் நிதி தர இருக்கிறார்கள்.

தேர்தல் நிதி திரட்டுவதற்காக காமராஜர் செல்லும் 6-வது மாவட்டம் செங்கற்பட்டு ஆகும்.

## கிசான் கட்சிக்கு தொண்டர்கள் நிர்ப்பந்தம்

சிமன்பாய் பட்டேலின் கிசான்மஸ்தூர் லோக்பக்ஷா கட்சி தொண்டர்களின் நிர்ப்பந்தம் காரணமாகவே, ஜனதா முன்னணிக்கு அக் கட்சி நிபந்தனையற்ற ஆதரவு அளிக்க முன் வந்திருக்கிறது என்று மொரார்ஜிதேசாய் கூறினார்.

ஜனதா முன்னணி இது வரை கிசான் கட்சியின் ஆதரவைக் கேட்டதில்லை என்றும் அவர் தெரிவித்தார்.

ஜனதா முன்னணி தலைவர்கள் இதற்குமுன் பேசும்போதுகூட, சிமன்பாய் பட்டேலும், ஜாலாவும் சட்டமன்றத்துக்குத் தேர்ந்தெடுக்கப்படவில்லை என்றால், கிசான் கட்சியுடன் உடன்பாடு காண்பதில் ஆட்சேபமில்லை என்று தெரிவித்திருந்ததாக மொரார்ஜி கூறினார். அந்த இருவரும் இப்போது சட்டசபைக்கு தேர்ந்தெடுக்கப்படவில்லை என்றும், ஆகையால் அக்கட்சியுடன் உடன்பாடு காணப்பட்டிருக்கிறது என்றும் மொரார்ஜி தேசாய் கூறினார்.

# அ.தி.மு.க.வினர் 29 பேர் மீது குற்றப்பத்திரிகை

செங்கற்பட்டு, ஜூன் 18—அ. தி. மு. க. பொருளாளர் எஸ். எம். துரைராஜ் எம். எல் ஏ. உள்பட 29 பேர் மீது பிரதம ஜுடிசியல் மாஜிஸ்டிரேட் கோர்ட்டில் நேற்று போலீசார் குற்றப்பத்திரிக்கையை தாக்கல் செய்தனர்.

சென்ற மாதம் 18-ம் தேதி முதல்வர் கருணாநிதி செங்கற்பட்டுக்கு வந்தபோது துரைராஜும், அதிமுக உறுப்பினர்களும் சட்ட விரோதமாகக் கூடி போலீசார் தங்கி இருந்த காமதேனு லாட்ஜை தாக்கியதாக குற்றப் பத்திரிகையில் தெரிவிக்கப்பட்டுள்ளது. திமுக உறுப்பினர் விஸவநாதனை மூங்கில் தடியால் அடித்ததாக துரைராஜ் மீதும், ஒரு கான்ஸ்டபிளை அடித்ததாக இரு அதிமுக உறுப்பினர்கள் மீதும் குற்றச்சாட்டு தெரிவிக்கப்பட்டுள்ளது.

இந்த வழக்கும் முனுஆதி எம். எல். ஏ. மற்றும் 28 அதிமுக உறுப்பினர்கள்மீது தொடரப்பட்டுள்ள இன்னொரு வழக்கும் ஜூலை 7-ந் தேதி விசாரணைக்கு எடுத்துக் கொள்ளப்படும்.

### நியூயார்க் பருத்தி மார்க்கெட்

நியூயார்க், ஜூன் 17—

| | |
|---|---|
| ஆரம்ப விலை | 45-30 |
| முடிவு விலை | 45-75 |

## நாளைய நிகழ்ச்சி

அறிவியக்கப்பேரவை: சொற்பொழிவு: தலைமை: சாலைஇளந்திரையன், பங்கு பெறுவோர்: கவிஞர்குடியரசு, சாலினி இளந்திரையன், இடம்: பெரியார் திடல், பரங்கிமலை. மாலை 6-30 மணி.

## திருவாரூரில் விழியிழந்தோர் பள்ளி

கும்பகோணம், ஜூன் 18-திருவாரூரில் ஜூன் மூன்றாவது வார கடைசியில் வழி இழந்தோர் பள்ளி ஒன்று தொடங்கப்பட இருக்கிறது. இப்பள்ளியில் 5 வயது முதல் 10 வயதுக்குட்பட்ட 50 சிறுவர் சிறுமியர் சேர்த்துக் கொள்ளப்படுவர். இவர்களுக்கு உணவு உடை, தங்கும் விடுதி இலவசமாக வழங்கப்படும். இத்தகவலை மாவட்ட விளம்பர அதிகாரி அறிவித்தார்.

# சாராயம் கடத்திய காரை துரத்திபிடித்தபோலீஸ்ஜீப்

சென்னை, ஜூன் 18—சாராயம் கடத்திய டாக்சியை போலீஸ் ஜீப் ஒன்று மிக சாமர்த்தியமாகத் துரத்திப் பிடித்தது.

திங்கட்கிழமை இரவு அசோக்நகர் பகுதியில் இன்ஸபெக்டர் தேவராஜன் தமது கோஷ்டியுடன் ரோந்து சுற்றிக்கொண்டிருக்கையில், வேகமாக ஒரு டாக்சி சென்று கொண்டிருப்பதைப் பார்த்தார். சந்தேகம் ஏற்பட்டதால் ஜீப்பில் அந்த டாக்சியை அவர் பின்தொடர்ந்தார். ஜீப்பைப் பார்த்ததும் டாக்சி தப்பிச் செல்ல முயன்றது. ஒரு திருப்பத்தில் செல்லும்போது மரத்தில் மோதி டாக்சி நின்றது இருட்டில் டாக்சி டிரைவர் தப்பிச் சென்றுவிட்டார்.

டாக்சியைச் சோதனை செய்து பார்த்தபோது அதில் 180 லிட்டர் சாராயம் இருப்பது கண்டு பிடிக்கப்பட்டது. டாக்சியைத் துரத்திச் சென்ற ஜீப் திடீர் என்று நிறுத்தப்பட்டதால் ஒரு விளக்குக் கம்பத்தில் மோதி சிறிது சேதமடைந்தது.

டாக்சியைக் கைப்பற்றி போலீசார் புலன் விசாரித்து வருகின்றனர்.

## சென்னை மார்க்கெட்

சென்னை, ஜூன் 18—

**தங்கம்**

| | |
|---|---|
| (24 காரட்) சுத்த தங்கம் 10 கிராம் | ரூ. 555 00 |
| (22 காரட்) சில்லரை கிராம் | ரூ. 52 50 |

**வெள்ளி**

| | |
|---|---|
| பார் வெள்ளி (1 கி. கி.) | ரூ. 1155 00 |
| உள்ளூர் | 1105 00 |
| (வெள்ளி 10 கிராம்) | ரூ. 11 65 |

**மணிலாப்பயறு**

| | |
|---|---|
| கோடைகால பட்டாணி மொத்த விலை | 277 00 |

**மணிலா எண்ணெய்**

| | |
|---|---|
| மொத்த விலை | ரூ. 740 00 |
| சில்லரை விலை | ரூ. 8 10 |

**விளக்கெண்ணெய்**

| | |
|---|---|
| (100 கி. கி.) சென்னை கிடங்குடெலிவரி திருப்பத்தூர் மொத்த விலை | ரூ. 430 00 |
| சேலம் தாமரை அன்னம் மார்க் 16 05 கி. கி.) | ரூ. 74 00 |

**தேங்காய் எண்ணெய்**

| | |
|---|---|
| (15.06 கி. கி.) டின் எம்.எஸ்.மார்க் | ரூ. 149 00 |
| முதல் | ரூ. 150 00 |

**நல்லெண்ணெய்**

| | |
|---|---|
| 17 கி. கொண்ட டின் 1-க்கு (அக்மார்க் குருபரன் மார்க்) | ரூ. 145 00 |
| முதல் | ரூ. 147 00 |
| விற்பனை வரி தனி சில்லரை கிலோ 1-க்கு | ரூ. 9 50 |

**கடலைப்பிண்ணாக்கு**

| | |
|---|---|
| 70கி.கி.கொண்டமூட்டைக்கு 70 எக்ஸ்பெல்லர் | ரூ. 75 00 |

**சர்க்கரை**

| | |
|---|---|
| பகிரங்க மார்க்கெட் விலை 100 கி. கி. | ரூ. 458 00 |
| முதல் | ரூ. 460 00 |

## இந்திரா விவகாரம்

# கருணாநிதி பேச்சு: பக்தவத்சலம் வெளியிட்ட கருத்து

சென்னை, ஜூன் 18— "இந்திரா காந்தி பிரதமர் பதவியிலிருந்து விலகவேண்டும் என்று எதிர்க்கட்சியினர் விதண்டாவாதம் செய்துவருகிறார்கள். நாமும் அதில் ஒரு கல்லைப் போடுவோம் என்று முதலமைச்சர் கருணாநிதி பேசியது சரியா?" என்று முன்னாள் முதல்வர் பக்தவத்சலம் கேட்டார்.

நேற்று சென்னையில் நடந்த புது காங்கிரஸ் கட்சியின் பேரவைக் கூட்டத்தில் பக்தவத்சலம் பேசுகையில் கூறியதாவது:—

நமது நாட்டில் இதுவரை காணாத ஒரு நெருக்கடி ஏற்பட்டுள்ளது. 1969ல் இன்று பழைய காங்கிரசில் இருக்கும் ஒருசிலர் காங்கிரசிலிருந்து பிரதமரை நீக்க வேண்டும் என்று எடுத்துக் கொண்ட விபரீத முடிவு காரணமாக ஒரு நெருக்கடி ஏற்பட்டது. அதன் மூலம் காங்கிரஸ் இரண்டாகப்பிளந்தது.

1971 தேர்தலில் இந்திராவின் தலைமை நாட்டுக்குத் தேவை என்பதை மக்கள் நிரூபித்தார்கள். அன்று நடந்ததைவிட மிகவும் சிக்கலான ஒரு நெருக்கடிநிலை இப்போது நாட்டில் ஏற்பட்டுள்ளது. பெரிய பத்திரிகைகள் எல்லாம்—இங்கிலாந்து நாட்டின் பத்திரிகைகள் கூட—நிலைமையை உணர்ந்து இந்திரா ராஜிநாமாச் செய்ய அவசியமில்லை என்று எழுதிக்கொண்டிருக்கின்றன, ஆனால் இங்கே இருக்கும் சில பேருக்கு சந்தேகங்கள் ஏற்பட்டதால் விதண்டாவாதம் செய்து கொண்டிருக்கிறார்கள். இந்திரா ராஜினாமா செய்ய வேண்டும் என்று இன்று சொல்பவர்கள், அலகாபாத் உயர்நீதிமன்றத் தீர்ப்புக்கு முன்பும் அவ்வாறு சொன்னவர்கள்தான்.

அலகாபாத் உயர்நீதிமன்றம் அளித்த தீர்ப்பு நீதிமன்ற வரலாற்றிலேயே முன்பு காணாத-கண்டிருக்க முடியாத ஒரு தீர்ப்பாகும் அந்தத் தீர்பை அளித்த அதே நீதிபதி ஒரு தடை உத்தரவையும் கொடுத்திருக்கிறார். இதுவும் வரலாறு காணாத ஒன்றுதான். இந்தத் தடை உத்தரவை எதற்காக நீதிபதி கொடுத்தார் என்பதைப் புரிந்து கொள்ளாவர்கள் தான் அப்படி விதண்டாவாதம் செய்துகொண்டிருக்கிறார்கள்.

சட்டபூர்வமாக பிரதமர் ராஜிநாமாச் செய்யவேண்டிய அவசியமே இல்லை. பிரதமர் மீது சாட்டப்பெற்ற குற்றச்சாட்டுகளில் இரண்டைத் தவிர எதுவும் நிரூபிக்கப்படவில்லை. இந்த இரண்டு குற்றச்சாட்டுகளைப் பற்றி சுப்ரீம் கோர்ட் என்ன செய்கிறது என்பதை அறியத்தான் நாம் அப்பீல்செய்கிறோம். அத்தகைய ஒரு தீர்ப்பை அளித்த நீதிபதியை நாம் நேரடியாகத் தாக்கிப் பேசினால் அது கோர்ட்டை அவமதிப்பதாகும். ஆனால் தீர்ப்பைப் பற்றி விமர்சிப்பது கோர்ட்டை அவமதிப்பதாகாது. வெளிநாட்டு பத்திரிகைகள்கூட இந்திராதேவை என்றுதான் கூறுகின்றன. ஒரு கோர்ட்டின் தீர்ப்பை மற்றொரு தீர்ப்பு ரத்துசெய்யவில்லையா? இதை எல்லாம் மக்களுக்கு நீங்கள் தெளிவான முறையில் எடுத்துச் சொல்லவேண்டும்.

எதிர்க் கட்சிக்காரர்கள் விதண்டாவாதம் செய்து கொண்டிருக்கிறார்கள். நாமும் அதில் ஒரு கல்லைத் தூக்கிப் போடுவோம் என்று தமிழ் நாட்டில் கருணாநிதி கடந்த 15ம் தேதி கூட்டத்தில் சில கருத்துக்களை சொல்லியிருக்கிறார். தமிழ்நாட்டில்காங்கிரஸ் ஸ்தாபனத்தை வலுப்படுத்த வேண்டும் என்று பக்தவத்சலம் பேசுகையில் வலியுறுத்தினார்.

மற்றும் கே. டி. கோசல்ராம். தஞ்சை ராமமூர்த்தி, ஏ. கே. சண்முகசுந்தரம், டி. செங்கல்வராயன், ஜி. பன்னீர்செல்வம், ஆர். வி. சுவாமிநாதன் எம். பி., மாசிலாமணி, ஏ. ஜெயராமன், ஆர். டி. பார்த்தசாரதி, ஆறுமுகசாமி எம். எல். சி., கலியபெருமாள், அகில இந்திய காங்கிரஸ் பொதுக் காரிய தர்சி திருமதி மரகதம் சந்திரசேகர் ஆகியோர் பிரதமர் இந்திரா பதவியில் தொடர்ந்திருக்கவேண்டியதன அவசியத்தை வலியுறுத்திப் பேசினார்கள்.

இறுதியில் பசுபதி தனராஜ் நன்றி கூறினார்.

## மோட்டார்-ரயில் மோதலை தடுக்க மந்திரி யோசனை

புனா, ஜூன் 18—ஆளில்லாத ரெயில்வே லெவல் கிராசிங்குகளின் இரு பக்கங்களிலும் வேகத்தைக் கட்டுப்படுத்தும் வகையில் பாதைகள் மேடாக அமைக்கப்பட வேண்டும்.

இந்த யோசனையை மத்திய ரெயில்வே துணை அமைச்சர் குரேஷி நேற்று புனாவில் நிருபர்களிடம் வெளியிட்டார்.

புனாவிற்கு அருகே கொரேகானில் இருக்கும் ஆளில்லாத லெவல்கிராசிங் ஒன்றில் ஒரு ரெயிலும் டிரக் வண்டியும் நேற்று முன்தினம் பயங்கரமாக மோதிக் கொண்டன. விபத்தை பார்வையிடுவதற்கு கொரேகான் செல்லும் வழியில் புனா ரயில்வே நிலையத்தில் அமைச்சர் நிருபர்களிடம் பேசினார்.

லெவல்கிராசிங்குகளின்இரு பக்க பாதைகளையும் மேடாக்கும் யோசனை மகாராஷ்டிர அரசிடம் தெரிவிக்கப்படும் என்றார் குரேஷி

# எதிர்க்கட்சியினர் புகார் விஷமத்தனமானது: இந்திரா பேச்சு

புதுடெல்லி, ஜூன் 18—எதிர்க்கட்சியினர் புகார்கள் ஆதாரமற்றது விஷமத்தனமானது என்று பிரதமர் இந்திரா காந்தி கூறினார்.

நேற்று பிரதமர் இல்லத்திற்கு வெளியில் கூடியிருந்த ஆதரவாளர்கள் கூட்டத்தில் இந்திரா பேசினார். அவர் கூறியதாவது:—

டெல்லிக்கு வெளியிலிருந்து ஆள்ஒன்றுக்கு ரூ 8 வீதம் கூலிக்கு ஆர்ப்பாட்டக்காரர்களை கொண்டு வருவதாக என் பெயருக்கு இழுக்குதேட ஏதேனும் புகார் கூறுவதில் எதிர்க்கட்சியினர் முனைந்துள்ளனர்.

அலகாபாத் உயர் நீதிமன்ற உருவ பொம்மை எரிக்கப்பட்டதாகக் கூறப்படுவது பொய், ஆதாரமற்றது. நேற்று மாலை நான் ஒரு கூட்டத்தில் பேசுகையில் டெலிவிஷனில் தனது முகம் தெரியக் கூடாது என்று சிலர் டெலிவிஷன் கேமிராவை இயக்கியவருக்கு இடையூறு விளைவித்துள்ளனர்.

எதிர்க் கட்சியினர் புகார்கள் யாவும் விஷமத்தனமானவை.

இவ்வாறு பிரதமர் இந்திரா கூறினார்.

நேற்றைய கூட்டத்தில் ஆண்களைவிடப் பெண்கள் அதிகமாக இருந்தனர். புறநகர் பகுதிகளிலிருந்தும் அரியானா எல்லைப் பகுதிகளிலிருந்தும் இவர்கள் வந்திருந்தனர்.

## பிரதமருக்கு முதல்வர்கள் ஆதரவு

புது காங்கிரஸ் கட்சி ஆட்சி அமைந்துள்ள மாநிலங்களின் முதலமைச்சர்கள் நேற்று காங்கிரஸ் தலைவர் டி. பி. பருவாவை சந்தித்து பிரதமர் இந்திராவின் தலைமைக்கு தங்களது ஆதரவைத் தெரிவித்துக்கொண்டனர்.

நாளை கூடும் புது காங்கிரஸ் பார்லிமெண்டரி கூட்டத்தில் இந்திராவின் தலைமைக்கு நம்பிக்கை தெரிவித்து தீர்மானம் ஒன்றை நிறைவேற்றும்.

இந்தியாவின் தலைமைக்கு நம்பிக்கை தெரிவிக்க வருகிற 20ம் தேதி புதுடெல்லியில் பேரணி ஒன்றை புது காங்கிரஸ் நடத்துகிறது. பருவா இதற்கு தலைமை வகிப்பார், பேரணியில் பிரதமர் இந்திரா உரை நிகழத்துவார்.

## மாணவர் இரத்த கையெழுத்து

பிரதமருக்கு ஆதரவு தெரிவித்து 519 மாணவர்கள் ரத்தக் கையெழுத்திட்ட மகஜர் ஒன்றை பஞ்சாப் முதல்வர் ஜைல்சிங் பிரதமரிடம் கொடுத்தார்.

பஞ்சாப் மாநிலத்தைச் சேர்ந்த புது காங்கிரஸ எம். பி.க்கள் புதுடெல்லியில்கூடி பிரதமரின் தலைமைக்கு ஆதரவு தெரிவக்கும் தீர்மானத்தை நேற்று நிறைவேற்றினர். இந்தக் கூட்டத்தில் மத்திய அமைச்சர்கள சுவரண்சிங், குஜ்ரால் உதவி ரெயில்வே அமைச்சர் புட்டா சிங் ஆகியோர் கலந்து கொண்டனர்

## கடத்தல் மன்னர் காவல் சட்டம் நீடிப்பு

புதுடெல்லி, ஜூன் 18—கைது செய்யப்பட்டு காவலில் வைக்கப்படும் கடத்தல் மன்னர்கள், அதை எதிர்த்து கோர்ட்டில் வழக்குப்போடுவதற்கான உரிமையை ரத்து செய்து ஜனாதிபதி போட்ட உத்தரவு மேலும் 6 மாத காலத்திற்கு நீடிக்கப்பட்டுள்ளது.

இதுசம்பந்தமாக ஜனாதிபதி முன்னர் போட்ட உத்தரவு இம்மாதம் 22-ந் தேதியுடன் காலாவதியாவதாக இருந்தது. இப்போது இந்தஉத்தரவு மேலும் 6 மாத காலத்துக்கு நீடிக்கப்பட்டுள்ளது.

# மாக்ஸிம் கார்க்கி

"சின்னவன்"

**ஜூன் 18-ந் தேதி மாக்ஸிம் கார்க்கியின் மறைவு நாள். அந்தப் புரட்சி எழுத்தாளர் மறைந்து இன்று 39 ஆண்டுகள் ஆகின்றன**

உலகப் புகழ் பெற்ற எழுத்தாளர்களில்—உரிமைக்காகப் போராடிய எழுத்தாளர்களில்—கார்க்கிக்கு இணையானவர் எவருமில்லை' என காந்தியடிகளே கூறியுள்ளார்.

இவரது நூல்கள் 120 மொழிகளில் மொழி பெயர்க்கப்பட்டு 3 கோடியே 60 லட்சம் பிரதிகள் விற்பனையாகியுள்ளன.

மாக்ஸிம் என்பது குடும்பப் பெயர். இவரது உண்மைப் பெயர் அல்யோஷாபெஷ்கோவ் என்பதாகும்.

கார்க்கி என்றால் ரஷ்ய மொழியில் கசப்பு என்று பொருள். தம் வாழ்க்கை நெடுகிலும் ஏராளமாகக் கசப்பான நிகழ்ச்சிகளையே கண்டவராதலின் கசப்பு என்று பொருள்படும் புனைபெயரையே கொண்டார் போலும்.

தந்தை மாக்ஸிம் சாவட்டயேவிச் ஒரு தச்சுவேலைக்காரர். வார்வரா என்ற பெண்மணிக்கும் சாவட்டயேவிச்சுக்கும் மகனாக 1868 மார்ச் 17-ல் பிறந்தார். நான்கு வயதிலேயே தந்தையை இழந்தார். பின் தாய் வழிப்பாட்டியான அக்குலினா ஐவனேவ்னா என்ற மூதாட்டியால் வளர்க்கப்பட்டார்.

பாட்டி அக்குலினா அன்பு, கருணை, பொறுமை, உழைப்பு ஆகிய மேலான பண்புகள் நிறைந்தவள். கடவுள் பக்தி மிகுந்தவள். அதுவுமின்றி கற்பனை வளம் செறிந்த கதைகள் பலவற்றை அறிந்து வைத்திருந்து கார்க்கிக்கு அவற்றைக் கூறுவாளாம். இதுதான் பின்னாளில் கார்க்கிக்கு எழுதும் ஆற்றலைக் கொடுத்ததெனலாம்.

தாத்தா விநோதமான பிறவி. அவர் தம் சிறுவயதில் பட்ட சிரமங்களும் துன்பங்களும் ஏராளம். அவ்வளவு துன்பங்களையும் அவர் மற்றவர்களுக்கு வழங்குவதில் தம வயதுக் காலத்தில் தீவிரமாயிருந்தார். அதாவது கொடுமைப்படுத்துவதில் குன்றென விளங்கினார். கார்க்கியை அவர் அடித்த அடிக்குக் கணக்கு வழக்கில்லை.

கார்க்கி தம் இளமைப் பருவ வாழ்க்கையில் சந்தித்த எத்தனையோ பேர்களை குறிப்பிட்டிருக்கிறார். தாத்தாவுக்கு சொந்தமான வீட்டில் குடியிருந்தார் நடுத்தர வயதுக்காரர் ஒருவர். அவர் எதற்கெடுத்தாலும் 'இது மிக நேர்த்தி' என்று கூறுவாராம். இதை வைத்து அவருக்கு 'இது மிக நேர்த்தி' என்றே பெயர் வைத்து விட்டனர். அன்பு சாந்தம் முதலியன அவர் குணங்கள்.

சிறு வயதில் கார்க்கி வசித்த ஊர் நிஷ்னிநோவோகிராட் என்பதாகும். அங்கு கஸ்ஸிரின்கள் என்ற வகுப்பினர் தாம் அதிகம்.

அனைவரும் ஏழைகள். கபடும், வன்னெஞ்சமும், கருணையின்மையும், திருடும் பழக்கமும் உள்ளவர்கள் அவர்கள். இவர்களின் மத்தியில்தான் கார்க்கி வளர்ந்தார். எனினும் இவரது தன்மை தனித்ததாகவே இருந்தது. சிறு வயதிலேயே இவர் நேர்மையின்மையையும் கொடுமையையும் கண்டு கொதித்தார்.

கார்க்கியின் அன்னை வார்வரா தன் கணவனை இழந்து தாய் வீட்டிற்கு வந்து சில நாட்களில் வேறு யாருடனோ உறவு கொண்டு ஒரு பிள்ளையைப் பெற்று அதையும் சாகக் கொடுத்து விட்டு மீண்டும் பாட்டி வீட்டுக்கே-அதாவது தன் தாய் வீட்டுக்கே—வருகிறாள். சில நாட்கள் கழித்து அவள் மீண்டும் தன்னிலும் 10 வயது குறைந்தவனான மாணவன் ஒருவன்பால் கவரப்பெற்று அவனை மணந்து கொண்டாள், இவன் அவளை மிகவும் கொடுமைப்படுத்துகிறான். இருவரும் வேறு ஊரில் தனிக் குடித்தனம் நடத்திப் பொருளையெல்லாம் இழந்து மீண்டும் நிஷ்னி நோவோ கிராட்டுக்கு வருகின்றனர். இந்த 2-வது கணவனின் கொடுமைகாரணமாக வார்வரா விரைவில் இறந்து விட்டாள். எல்லா வகையிலும் அநாதையாகி விட்ட கார்க்கிக்குப் பாட்டி ஒருத்திதான் பற்றுக்கோலாக விளங்கினாள்.

சிறுவன் கார்க்கியைப் பள்ளியில் சேர்க்கின்றனர். மற்ற சிறுவர்களைக் காட்டிலும் கார்க்கி கல்வியில் கூரிய அறிவு பெற்றிருந்தார். பள்ளியில் படித்துக்கொண்டே ஆறேழு வயதில் சம்பாதிக்கவும் புறப்பட்டார் கார்க்கி. குப்பைமேடுகளில் கிடைக்கும் பழைய பேப்பர், இரும்பு, எலும்பு, கந்தை முதலியவற்றைச் சேகரித்துக்கொண்டு போய் விற்றுப் பாட்டியிடம் கொடுப்பார். சில காலத்துக்குப் பின் தாத்தா கார்க்கியை ஒரு செருப்புக் கடையில் கொண்டுபோய் அமர்த்தினார். அந்தக்கடையின் முதலாளி பார்ப்பதற்கு ஒரு குருடன் போலிருந்தான். கொடிய உள்ளங்கொண்ட அவனிடம் அடியும் உதையும் பட்டுத்துன்புற்ற கார்க்கி ஓடிப்போக எண்ணியிருந்தார். ஒருநாள் தற்செயலாக சூடான குழம்பைக் கையில் ஊற்றிக்கொண்டு ரணகாயமாகிவிட்டது. ஆஸ்பத்திரியில் சேர்ந்தனர். அங்கு பாட்டி வந்து கார்க்கியை அழைத்துச் சென்று விட்டாள்.

சில நாட்களுக்குப்பின் தாத்தாவானவர் கார்க்கியை ஒரு பிளான் வரையும் உத்தியோகஸ்தர் வீட்டில் கொண்டுபோய் சேர்க்கிறார் வேலை கற்றுக்கொள்வதற்காக. சிறுவன் கார்க்கியைக் கொண்டு அந்த வீட்டார் வாங்காத வேலை கிடையாது. மாடிப் படிக்கட்டுக்கள் உட்பட வீடு முழுவதையும் கழுவுவதுடன் மார்க்கெட்டுக்கும் சென்று சாமான்களைச் சுமந்து வருவது. குழந்தைகளுக்குத் தாதியாக இருப்பது விறகு வெட்டுவது வரை எல்லா வேலைகளையும் கார்க்கியைக் கொண்டே முடித்தனர்.

ஆனால் பிளான் வரையும் வேலையை சொல்லித் தரவேயில்லை. அக் குடும்பத்தினர் தங்களுக்குள் போட்டுக் கொண்ட சண்டையை மிக வேடிக்கையாக கார்க்கி வர்ணித்திருக்கிறார். எப்பொழுதும் சண்டை போட்டுக் கொண்டேதான் இருப்பார்களாம். ஒரு நாள் இந்த வீட்டை விட்டு ஓடிவிடுகிறார். ஒரு கப்பலில் சமையற் கூடத் தலைவனுக்குக் கையாளாக வேலை பார்க்கிறார். எச்சிற் தட்டுக்களையும், கரண்டிகளையும், கிண்ணங்களையும் கழுவும் வேலை. அந்த சமையற் கூடத் தலைவன் பெயர் ஸ்மூரி என்பதாகும். மிகப் பெரிய ஆகிருதியும் பலமும் வாய்ந்தவன் ஸ்மூரி. கண்டோர் நடுங்கும் தோற்றமுடையவனெனினும் நெரிய பண்பு நிறைந்தவனாகவும் இருந்தான். கார்க்கியின் வரலாற்றைக் கேட்டு இரக்கம் கொண்டான். பல உயரிய நூல்களைக் கொடுத்துப் படிக்கச் சொல்லிக் கேட்பானும் அவன்,

அந்த இளம் வயதிலேயே துன்பங்களால் புடம் போடப்பட்ட கார்க்கியின் அறிவு இந்த நூல்களின் துணையால் மேலும் கூர்மை பெறத் துவங்கியது.

கப்பலில் வேலை செய்கையில் சில பொருட்களை ஊழியர்கள் திருடி விற்றுவிட்டனர். பழி கார்க்கியின் தலையில் வந்து விழுந்தது. அதனால் அவ்வேலையை விடவேண்டியதாயிற்று.

மீண்டும் பாட்டியிடமே செல்கிறார். காடுகளில் சென்று கண்ணி வைத்துப் பறவைகளைப் பிடித்துக் கொண்டு வந்து பாட்டியிடம் கொடுப்பார். அவற்றை விற்றுப் பிழைப்பை நடத்தினர் சில காலம். பறவை பிடிப்பதில் மனத்துக்கு வருத்தம் உண்டானாலும் வேறு வழியில்லாததால அதை செய்ததாக மனம் வருந்தி எழுதியுள்ளார் அவர்.

காடுகளில் சென்று விறகு சேகரித்தல், பழம், கொட்டைகள், காளான்கள் சேகரித்தல் இந்த வேலைகளையும் செய்தார். இவற்றிலெல்லாம் சிறு வருமானங்கள் வரும். இதிலேயே பாட்டியும்தானும் காலங்கழிப்பார்கள். ஒரு தடவை மரத்தின் மீது ஏறி அணில் சேர்த்து வைத்திருந்த கொட்டைகளை எடுக்கும் போது வேட்டைக்காரன் ஒருவன் துப்பாக்கியால் சுட்டு விட்டான். அநேக ரவைகள் இவர் தம் உடம்பில் புகுந்து விட்டன. பாட்டியின் பராமரிப்பால் பிழைத்துக்கொண்டார்.

பிளான் வரையும் ஆட்களிடம் வேலைக்கு இருந்தபொழுது நூல்கள் படிப்பதற்குக் கிடைத்தன. ஆனால் அதற்கு நேரம்தான் கிடைக்கவில்லை. மேலும் அந்த வீட்டுக்காரர்கள் நூல்கள் படிப்பதை ஒரு தீய பழக்கமாகவும் கருதினர். (நாத்திகவாதமும் புரட்சி மனப்பான்மையும் பரவத் தொடங்கியிருந்ததால்—அவையும் நூலறிவாளர்களால் மட்டுமே நடைபெற்றுக் கொண்டிருந்தால் பழைமை விரும்பும் மக்கள் அச்சம் கொள்ளலாயினர்) இவர் நூல்கள் இரவல் வாங்கிப் படிப்பதை அவர்கள் வெறுத்ததுடன் இடையூறுகளும் செய்யலாயினர்.

சிறுவனாகவும் இராமல், வயதுவந்தவனாகவும் ஆகாத 16, 17 வயதில் ஓர் அழகு நங்கையின் பழக்கம் அவருக்குக் கிடைக்கிறது. அவள் மூலமாக அவர் நூல்கள் பெற்றுப் படிக்கிறார். அவளுக்கு அவர் 'ராணி மார்கோட்' என மானசீகமாகப் பெயர் வைக்கிறார்.

ஏதாவது ஒரு பல்கலைக் கழகத்தில் சேர்ந்து படித்தால் அறிவு மேலும் விருத்தியாகும் என்பதாலும் பட்டம் பெற்றால் வேலை எளிதில் கிடைக்கும் என்பதாலும் இவர் பல்கலைக் கழகப் படிப்பு பெறுவதற்காக காஸான் நகரத்துக்குச் செல்கிறார். காஸான் நகர பல்கலைக் கழகம் பணக்காரர்களுக்கே இடங்கொடுக்கும் என்றும் ஏழைகள் அதில் சேர இயலாதெனவும் அறிந்து கொள்கிறார்.

ஜனசஞ்சாரமற்ற இடத்தில் இடிந்து போன ஒருவீடு இருக்கிறது. அந்தப் பாழடைந்த வீட்டின் குகை போன்ற அறையில் நாய்களும், எலிகளும் வாசம் செய்தன. அந்த இடத்திலேயே செத்துப் போன அவற்றின் வாடை மூக்கைத்தொளைக்கும். அந்த இடத்தைத்தான் கார்க்கி தங்குமிடமாக முதன் முதலில் எடுத்துக் கொண்டார். அதையே தமது முதல் பல்கலைக் கழகம் எனக்கூறுகிறார்.

(வெள்ளியன்று வெளி வரும்)

## இன்றைய சினிமா

சென்னை

ராம்: யாருக்கும் வெட்கமில்லை

நியூ எல்பின்ஸடன் — RAJAHAMSAM

நேஷனல் — மனோன்மணி

சராஸ்: மாயாபஜார்

குரோம்பேட்டை

வெற்றி: யாருக்கும் வெட்கமில்லை

பல்லாவரம்

லட்சுமி: வாழ்க்கை ரகசியம்

தாம்பரம்

எம். ஆர். தியேட்டர்: எல்லோரும் நல்லவரே

நேஷனல் — படிக்காத மேதை

சித்ரா: சித்தி

கொளத்தூர்

ஸ்ரீ குமரன் — கஸ்தூரிவிஜயம்

# 28-ந் தேதி அ.தி.மு.க. செயற்குழு கூட்டம்

சென்னை, ஜூன் 18— ஜூன் 28, 29 ஆகிய தேதிகளில் அண்ணா தி.மு. கழக தலைமை செயற்குழு, பொதுக் குழு கூட்டம் சென்னையில் நடைபெறும்.

தலைமை செயற்குழு கூட்டம் ஜூன் 28-ம் தேதியும், பொதுக்குழு கூட்டம் ஜூன் 29-ம் தேதியும் நடைபெறும்.

## இந்திராவுக்கு ஆதரவு அளிப்பது ஏன்?

# கருணாநிதியின் புகாருக்கு எம். ஜி. ஆர். அளித்த பதில்

**சென்னை, ஜூன் 18— பிரதமர் இந்திராவை முன்பு எதிர்த்த எம். ஜி ஆர். தற்போது இந்திராவுக்கு ஆதரவு அளித்துவருவது பற்றி முதலமைச்சர் கருணாநிதி புகார் கூறினார் அல்லவா? அதற்கு எம். ஜி. ஆர். பதில் அளித்தார்.**

இது சம்பந்தமாக எம். ஜி. ஆர். ஒரு அறிக்கை விடுத்தார்.

அந்த அறிக்கையில் எம். ஜி. ஆர். கூறியதாவது:—

புதுவையில் நடந்த பொது தேர்தலின்போது பிரதமர் மக்களின் வரிப்பணத்தில் தனது அரசியல் கட்சியின் தேர்தல் பிரச்சாரத்துக்கு ஹெலிகாப்டரில் வரலாமா— என்று நான் கேட்டதாக கருணாநிதி கூறியிருக்கிறார். அப்படித்தான் கேட்டேன். பிரதமரோ மற்ற அமைச்சர்களோ, வேறு பொறுப்புள்ள பதவிகளில் இருப்பவர்களோ அவ்வாறு செய்தால்—அன்று மட்டுமல்ல; என்றும் கண்டிப்பேன்.

அண்மையில் நடந்த குஜராத் தேர்தலின்போது குஜராத் மாநிலத்திலுள்ள காங்கிரஸ் பிரதமரின் சுற்றுப் பயண செலவுகளை ஏற்றுக் கொள்ளப்போவதாக வெளியிட்ட சேதியை தமிழக முதல்வர் படித்திருப்பார் என்று நம்புகிறேன்.

இத்தகைய மாற்றத்துக்கு எனது புதுவை பேச்சும் ஒரு வகையில் காரணமாக இருந்ததாக கருணாநிதி கருதினால் அவரும் என்னோடு சேர்ந்து மகிழ்ச்சியடையலாமே?

உண்மையில் இன்று நமது நாட்டின் நிலை என்ன? காங்கிரசில அனுபவமிக்க தலைவர்கள் பலர் இருக்கலாம். பிரதமர் பதவி வகிக்கத்தக்க ஆற்றல் உள்ளவர்களும் இருக்கலாம் ஆனால் இந்திய துணைக் கண்டத்திலுள்ள மிகப் பெரும்பான்மை மக்களின் நம்பிக்கையையும் ஆதரவையும் பெற்ற தலைவர்களில் இந்திரா காந்தி அன்றி வேறு யார் இருக்கிறார்கள்?

இந்திய துணைக்கண்டம் சமதர்ம சமுதாயத்தை உருவாக்கும் பக்குவத்தை நெருங்கிக் கொண்டிருக்கிறது. அதைத் தடுத்து நிறுத்தி தங்களது ஆதிக்கத்தில்—நிரந்தரமாக உழைக்கும் மக்களை அடிமைப் படுத்திக்கொள்ள ஜாதி பிரிவுகளையும் ஏகபோக முதலாளித்துவத்தையும் விரும்புகின்ற, ஏகாதிபத்திய வாதிகளின் பெருமுயற்சியில்—முன்பு மறைமுகமாகவும், இப்போது பகிரங்கமாகவும்—செயல்பட துணிந்து களத்தில் இறங்கியுள்ளனர். பலாத்கார முறையிலானாலும் சரி தங்களது எண்ணத்தை நிறைவேற்றி விடுவது என்ற ஜன நாயக விரோதச் செயலில் இறங்கியிருக்கின்ற பயங்கரமான சூழ்நிலை உருவாக்கப் பட்டிருக்கிறது.

### ஆபத்தான சேதி

இப்படிப்பட்ட சோதனைகளை துணிவோடு சந்திக்கும் ஒரு பிரதமர் பதவி விலக வேண்டும் என்ற ஆபத்தான சேதியைக் கேள்விப்படும் போது நாட்டு நலனில் அக்கறை கொள்ளாது அண்ணா தி.மு கழகம் அலட்சியமாக இருந்துவிட முடியாது. இந்திய மக்களின் எதிர்கால வாழ்வுக்கு ஜனநாயக அரசியல் அமைப்பு ஒன்றுதான் உத்தரவாதம் தரமுடியும் என்று நம்புகிற அண்ணா தி. மு. கழகம் நாட்டுக்கு ஏற்பட்டிருக்கும் நெருக்கடிகளை பயன்படுத்தி தனது விருப்பு வெறுப்புகளை வெளிகாட்டி பழி வாங்கும் கேவலமான அரசியலை நடத்தி ஜனநாயகத்துச்கு ஆபத்து ஏற்படுத்துகிறவர்களுக்கு துணைநிற்கமுடியாது.

### அண்ணா காட்டிய வழி

அண்ணா வேலூர் சிறைச்சாலையிலிருந்து வெளியே வந்ததும் அன்றே நடந்த வேலூர் பொதுக் கூட்டத்தில் தன்னை சிறையில் அடைத்தவர்கள் மீது சிறிதும் பழியுணர்ச்சியின்றி இந்திய நாட்டின் சுதந்திரம்தான் முக்கியம் என்று எடுத்துக்காட்டி அன்

(4-ம் பக்கம் பார்க்க)

# பார்லிமெண்ட் கூடுவதை ஒத்திவைப்பதா? எதிர்க்கட்சி கண்டனம்

**புதுடெல்லி, ஜூன் 18— பார்லிமெண்ட் கூட்டத் தொடரை ஒத்திவைக்கும் முயற்சியை கம்யூனிஸ்டல்லாத மற்ற எதிர்க்கட்சிகள் கண்டித்துள்ளன.**

அரசியல் சட்ட பூர்வமான ஆட்சி முறையைக் குலைப்பதற்கான எந்த முயற்சியும் பொறுத்துக் கொள்ளப்பட மாட்டாது என்று அவர்கள் ஆளும் கட்சித் தலைவர்களுக்கு எச்சரிக்கை விடுத்துள்ளனர். கூட்டத்துக்குப் பிறகு நிருபர்களிடம் பேசிய பழைய காங்கிரஸ் தலைவர்கள் அசோக மேத்தாவும், எஸ். என். மிஸ்ராவும், அலகாபாத் ஹைகோர்ட் தீர்ப்பின் விளைவாக பிரதம மந்திரியின் தேவைகளுக்கு ஏற்றாற்போல அரசியல் சட்ட இயந்திரத்தை சரிக்கட்ட முயற்சி செய்யப் படுவதாகக் குற்றம் சாட்டினர்.

### பிரதமர் மீது குற்றச்சாட்டு

பிரச்னை முழுவதையும் தெருச்சந்திக்கு இழுப்பதாக பிரதமர்மீது மேத்தா குற்றம் சாட்டினார். சட்டபூர்வமான முறையில் ஆட்சேபம் இருக்க வேண்டும் என்று தாங்கள் ஆவலாய் இருப்பதாக அவர் கூறினார், சட்ட அரசியல், சட்ட அமைப்புகள் தங்கு தடையின்றி செயல்பட அனுமதிக்கவேண்டும் என்றார்.

அரசியல் சட்ட இயந்திரத்தைக் குலைப்பதற்கான எந்த முயற்சியும் அனுமதிக்கப்பட மாட்டாது என்று எதிர்க் கட்சித் தலைவர்களின் கூட்டம் எச்சரித்ததாக மேத்தா கூறினார்.

### ஊர்வலம் ஒத்திவைப்பு

இந்திரா காந்தியின் ராஜிநாமாவைக் கோரி இம் மாதம் 21-ம் தேதி ஜனாதிபதி மாளிகைக்கு எதிர்க் கட்சிகள் ஊர்வலம் செல்ல திட்டமிட்டிருந்தனர். அந்த ஊர்வலம் ஒத்திவைக்கப்பட்டிருப்பதாக அசோக் மேத்தா தெரிவித்தார்.

21, 22 தேதிகளில் எதிர்க் கட்சிகளின் தேசிய நிர்வாகக் கமிட்டி கூட்டுக் கூட்டத்தை நடத்துவது உட்பட, மற்ற திட்டங்களில் மாறுதலில்லை என்றார் அவர்,

ஜெயப்பிரகாஷ் நாராயணுடன் ஆலோசனை கலந்து அவருடைய சௌகரியத்திற்கு ஏற்ப ஊர்வலத்துக்குப் புதிய தேதி பற்றி முடிவு செய்யப் படும் என்றும் அவர் சொன்னார்.

ஜெயப்பிரகாஷின் ஆலோசனை கிடைக்கவும், ஊர்வலத்தில் அவர் கலந்து கொள்ளச் செய்யவும் கூடிய விரைவில் டெல்லி வரும்படி ஜெயப்பிரகாஷ் கேட்டுக்கொள்ளப்படுவதாக மேத்தா கூறினார்.

### நாட்டுக்கே அவமதிப்பு

உத்தரப் பிரதேச மேல் சபை எதிர்க்கட்சித் தலைவர் கௌரி சங்கர ராய் லக்னோவில் வெளியிட்டுள்ள அறிக்கையில், பிரதம மந்திரி பதவியில் இந்திராகாந்தி நீடிக்க வேண்டுமென்று கூறும் ஒவ்வொரு அறிக்கையும் கோர்ட்டை மட்டுமின்றி நாட்டையும் அவமதிப்பதாகும் என்று கூறியிருக்கிறார். பதவி விலக வேண்டியதில்லை என்று இந்திரா காந்தி எடுத்துள்ள முடிவு நிக்ஸன் போல் அரசியல் தற்கொலைக்கொப்பான வழியாகும் என்றும் அவர் கூறினார்,

தேசிய இயக்கத்தை மூலாதாரமாகக் கொண்ட தலைவர்கள் இப்போதைய நெருக்கடியில் மனம் விட்டுப் பேச வேண்டுமென்றும் அவர் கேட்டுக் கொண்டார்.

### அகாலி தள தலைவர்கோரிக்கை

அகாலிதள தலைவர் மோகன் சிங் தூர் கூறுகையில் நாட்டின் தார்மிக, ஜனநாயக மரபுகளைக் காக்க இந்திரா காந்தி பதவி விலக வேண்டும் என்றார். ஆஜ்மீர் சிங் தலைமையில் டெல்லியில் நடந்த பஞ்சாப் மஜ்தூர் தள அணிவகுப்பில், இந்திரா காந்தி பதவி விலகவேண்டுமென்று கோரப் பட்டது.

### கொடும்பாவி

பாட்னாவில் நீதி பாதுகாப்பு வாரம் ஆரம்பமாகியது. அலகாபாத் தீர்ப்பினின்றும் எழும் தார்மிகப் பொறுப்புகளை நிறைவேற்ற இந்திரா காந்தி தவறியதை ஆட்சேபித்து கொடும்பாவி கொளுத்தப்பட்டது. பீகார் மாணவர் மக்கள் கமிட்டிகள் ஆதரவில் பீகார் நெடுக இந்திரா காந்தி ராஜிநாமாவை வற்புறுத்தும் வாரம் கொண்டாடப்படுகிறது.

### பாட்னாவில் தர்ணா

"இந்திராவை நீக்கு. நதியைக் காப்பாற்று" வாரக் கொண்டாட்டத்தில் ஒரு பகுதியாக நேற்று கவர்னர் மாளிகை முன்பாக சத்திர சங்கர்ஷ சமிதியைச் சேர்ந்த 100 தொண்டர்கள் 12 மணி நேர "தர்ணா" நடத்தினர். இரண்டரை மணி நேர மறியலுக்குப் பிறகு தூதுகோஷ்டியை கவர்னர் பண்டாரே வரவழைத்து விசாரித்து பிரதமர் ராஜிநாமாவைக் கோரும் மகஜரைப் பெற்றுக் கொண்டார்.

தேர்தல் சட்டத்தின் கீழ் எவருக்கும் விதிக்கப்பட்ட தகுதியின்மையை தாம் நீக்க முடியும் என்று பிரதம தேர்தல் கமிஷனர் டி. சாமிநாதன் கூறியதற்காக அவர் ராஜிநாமா செய்யவேண்டும்என்று இந்திய மக்கள் கட்சி கோரியுள்ளது.

பிரதம மந்திரி இந்திரா காந்தியின் தேர்தல்செல்லாது என்று அலகாபாத் ஹைகோர்ட் தீர்ப்பு அளித்த பிறகு இம்மாதிரி பிரதமதேர்தல் கமிஷனர் கூறினார்.

தனிப்பட்ட முறையில் சலுகை காட்டப்படும் என்ற உறுதியின் பேரிலேயே சாமிநாதன் இவ்வாறு கூறியிருப்பதாக இந்திய மக்கள் கட்சி காரியக்கமிட்டி ஓர் அறிக்கையில் கூறியிருக்கிறது,

# இந்திரா விலகக்கோரி சென்னையில் ஆர்ப்பாட்டம்

சென்னை, ஜூன் 18—பிரதமர் பதவியிலிருந்து இந்திரா விலகவேண்டும் என்று வற்புறுத்தி இந்திய மக்கள் கட்சியைச் சேர்ந்த சுமார் 50 பேர் சென்னை மவுண்ட்ரோடு தபாலாபீஸ் முன்பாக செவ்வாய்க்கிழமை மாலை சுமார் அரை மணி நேரம் ஆர்ப்பாட்டம் செய்தனர்.

அலகாபாத் ஹைகோர்ட் தீர்ப்பை மதித்து இந்திரா ராஜிநாமா செய்ய வேண்டும் என்று அவர்கள் கோஷமிட்டனர், ஆர்ப்பாட்டத்துக்கு டாக்டர் எம். சந்தோஷம் தலைமை தாங்கினார்.

பின்னர் லட்சுமிபுரம் இளைஞர் சங்கத்தில் இந்தியமக்கள் கட்சி சார்பில் ஒரு பொதுக் கூட்டம் நடந்தது. சுப்ரீம் கோர்ட்டில் அப்பீல் செய்வதால் பதவியில் நீடிக்க இந்திராவுக்கு சட்டப்படி உரிமை இருந்தாலும் தார்மீகஉரிமை இல்லை என்று அக்கூட்டத்தில் டாக்டர் சந்தோஷம் பேசுகையில் கூறினார்.

இக்கூட்டத்துக்கு பார்த்தசாரதி அய்யங்கார் தலைமை தாங்கினார். கிருஷ்ணமூர்த்தி (ஜனசங்கம்) குமாரவேல் (சோஷலிஸ்டு) சந்தானம் (சுதந்திரா) ஆகியோர் பேசினர்.

# பஸ் மோதி வாலிபர் பரிதாப சாவு

சென்னை, ஜூன் 18—சைக்கிளில் வந்து கொண்டிருந்த ஒரு வாலிபர் மீது பஸ் மோதியதால் அந்த வாலிபர் தலை நசுங்கி அங்கேயே பரிதாபகரமாக மரணமடைந்தார்.

இந்த கோர விபத்து இன்று காலை கிண்டி காந்தி மண்டபம் அருகே நடந்தது.

முன்னால் சென்ற பஸ் ஒன்றை இன்னொரு பஸ் முந்திச் செல்ல முயன்றபோது இந்த விபத்து நடந்ததாகக் கூறப்படுகிறது.

மரணமடைந்த வாலிபர் பற்றிய விவரங்கள் தெரியவில்லை. அவருக்கு வயது சுமார் 28 இருக்கும்.

# சுப்பிரமணியம் நாடு திரும்பினர்

புதுடில்லி, ஜூன் 18—நிதி அமைச்சர் சி. சுப்ரமணியம் சர்வதேச செலாவணி நிதியின் இடைக்கால அபிவிருத்திக் கமிட்டிகளின் கூட்டங்களில் கலந்து கொண்டுவிட்டு பாரிசிலிருந்து நேற்று இங்கு திரும்பினர்.

சோபியா, பெல்கிரேடு, லண்டன் ஆகியநகரங்களுக்கு விஜயம் செய்யத் திட்டமிட்டிருந்த சுப்பிரமணியம் நாட்டில் தற்போது தோன்றியுள்ள அரசியல் நெருக்கடி காரணமாக தமது சுற்றுப் பயணத்தை ரத்து செய்துவிட்டு டெல்லி திரும்பியிருக்கிறார்.

## ஏ. எல். சீனிவாசன் கருத்து

# 'திரைப்படங்களுக்கான தேசிய விருதுகள் ஒழிக்கப்படவேண்டும்'

சென்னை, ஜூன் 18— திரைப்படங்களுக்காக மத்திய சர்க்கார் வழங்கும் தேசிய விருதுகள் ஒழிக்கப்படவேண்டும் என்று தென்னிந்திய சினிமா அதிபர்கள் சங்கத் தலைவர் ஏ. எல். சீனிவாசன் கூறியுள்ளார்.

இது குறித்து அவர் விடுத்துள்ள அறிக்கையில் இந்த ஆண்டும தமிழ்படத்திற்கு தேசிய விருது தரப்படாததற்குக் கண்டனம தெரிவித்திருப்பதோடு, தேர்வுக் குழுவில் ஒரு தமிழர் கூட இல்லாதது வருந்தத் தக்கது என்றும குறிப்பிட்டுள்ளார்.

அவர் அறிக்கை வருமாறு!

சிறந்த திரைப் படங்களுக்கான தேசிய விருதுகள் அறிவிக்கப்பட்டிருக்கின்றன. இது எதிர்பார்த்த முடிவுகள்தான். எந்தப் பரிசையும் பெற தகுதியுள்ள தமிழ்ப் படம் எதுவும சென்ற ஆண்டில் தயாரிக்கப் படவில்லை என்ற முடிவு வருந்தத்தக்கது. சென்ற ஆண்டிலே வெளியான படங்களில் தங்கப்பதக்கம், அவள் ஒரு தொடர் கதை போன்ற படங்கள் 'தங்கத் தாமரை' பெறவில்லை என்றாலும வேறு எந்தத் தாமரையாவது பெறுகின்ற தகுதியுள்ளவை தான். முடிவு என்னவாக இருக்கும என்பதை முன்பே அறிந்த சிவாஜி புரொடக்ஷன்சார் தங்களது தங்கப்பதக்கம் படத்தை போட்டிக்கே அனுப்பவில்லை. நண்பர் அரங்கண்ணல் தனது அவள் ஒரு தொடர்கதை படத்தை ஏன் தான் அனுப்பினார் என்று எனக்குத் தெரியவில்லை.

மேற் குறிப்பிட்ட இரண்டு படங்களும் தமிழ் மக்களின் பெரும் பேராதரவைப்பெற்ற படங்கள். தரத்திலும் சிறந்ததென்பது நமக்குத்தெரியும். ஆனால் தமிழ் அறிந்த ஒருவர் கூட இல்லாத தேர்வுக் குழுவினருக்கு இது எப்படித் தெரியும்? தாய்த்தமிழின் தனித்தன்மை எப்படி புரியும்? நாட்டின அவல நிலையைப் படம் பிடித்துக் காட்டி இந்திய துணைக் கண்டத்திற்கு வெளி நாடுகளிலே இழிவைத் தேடித் தந்த ஒரு குறிப்பிட்ட மாநிலத்தின் படங்களுக்கே தங்கப் பதக்கம் என்பது எப்போதோ முடிவான முடிவு.

### அவமானம் தரும் முடிவு

இந்த ஆண்டு எடுக்கப்பட்டிருக்கின்ற முடிவு தமிழ்த் திரைப் படத்துறைக்கே அவமானத்தை ஏற்படுத்துகின்ற முடிவு. சிறந்த திரைப்படங்களுக்கான தேசிய விருதுகளின் தேர்வுமுறைகள் முறையாக இல்லை என்று ஒருவாரத்திற்கு முன்புதான் நான் கூறினேன். அதை உறுதிப்படுத்திவிட்டது இந்த ஆண்டு முடிவுகள்.

ஆகவே அடுத்த ஆண்டு முதலாவது திரைப்படங்களுக்கான தேசிய விருதுகள் கொடுப்பது ஒழிக்கப்பட வேண்டும். அப்படி ஒழிக்கப் படாவிட்டால்தமிழ்த்திரைப் படத்துறை ஒரு முடிவிற்கு வந்தாகவேண்டும். அதாவது தமிழ்ப் படங்களை தேசிய விருதுப் போட்டிக்கே இனி அனுப்புவது இல்லை என்ற ஒரே முடிவுதான் அது.

மேற்கண்டவாறு அந்த அறிக்கையில் கூறப்பட்டுள்ளது.

# இந்திராவுக்கு விளையாட்டு வீரர்கள் ஆதரவு

புதுடெல்லி, ஜூன் 18— பிரதமர் இந்திராவுக்கு டெல்லி விளையாட்டு வீரர்கள் நேற்று ஆதரவு தெரிவித்தனர்.

பெண்கள் உட்பட 500 விளையாட்டுவீரர்கள் இந்திரா வீட்டுக்கு அணிவகுத்துச் சென்று, இந்திரா பிரதமராக பதவியில் நீடிக்கவேண்டும் என்று கோரி கோஷமெழுப்பினர்.

விளையாட்டு வீரர்களிடையே இந்திரா பேசுகையில் சியோலில் நடைபெற்ற ஆசிய விளையாட்டுப் போட்டிகளில் கிடைத்த வெற்றி தம்மை மகிழ்ச்சியடையச் செய்துவிட்டதாகக் கூறினர். ஆயினும் மேலும் அதிக வெற்றிகளை ஈட்டும் வகையில் விளையாட்டு வீரர்கள் பாடுபட வேண்டும் என்று இந்திரா கேட்டுக்கொண்டார்,

# துபாயில் கடத்தல் மன்னர்கள் பீதி: சரக்குகள்தேக்கம்

சென்னை, ஜூன் 18—"இந்தியாவுக்கு கடத்தல் பொருட்களை அனுப்புவதில் பிரதான கேந்திரமாக விளங்கும் துபாயில் கடத்தல் மன்னர்களிடையே பெரும் பீதி ஏற்பட்டுள்ளது" என்று சென்னை மத்திய எக்சைஸ் கலெக்டர் சி. சிதம்பரம் கூறியுள்ளார்.

இந்தியாவில் கடத்தல் காரர்கள்மீது எடுக்கப்பட்டுள்ள கடும் நடவடிக்கையே இதற்குக் காரணம் என்றார் அவர்.

சென்னையில் ரோட்டரி சங்க கூட்டத்தில் பேசுகையில் அவர் இவ்வாறு கூறினர்.

"இந்தியாவில் கடத்தல் காரர்கள்மீது கடும் நடவடிக்கை துவங்கியதிலிருந்து துபாயில் கடத்தல் சரக்குகளின் விலைகள் 60 முதல் 70 சத விகிதம் விழுந்துவிட்டன. கடத்தல் சரக்குகளுக்கு கிராக்கிஇல்லாததால் ஏராளமான சரக்குகள் அங்கு தேங்கிக் கிடக்கின்றன" என்றும் அவர் சொன்னர.

"எப்படியும் தங்களுக்கு நஷ்டம் ஏற்படும் என்ற அச்சம் காரணமாக கடத்தல் புள்ளிகள் பீதி அடைந்துள்ளனர். தங்கள் கையில் உள்ள சரக்குகளை முடிந்தவரை இந்தியாவுக்கு கடத்த அவர் துடியாய் துடிக்கின்றனர்" என்றும் சிதம்பரம் கூறினர்.

"இந்திய அரசாங்கம் பல விரைவு வேகப் படகுகளை வாங்கியுள்ளது. கடத்தலை ஒடுக்க எல்லா நடவடிக்கைகளையும் எடுத்துள்ளது. எனினும் அடிப்படைக் காரணங்களைப் போக்க சில நீண்டகால நடவடிக்கைகள் தேவை என்றார் அவர்.

கடத்தல் வேலைகளை நடத்த பணம் போடும் பிரதான நபர் யார் என்பதைக் கண்டு பிடிப்பதில் உள்ள சிக்கல்களை சிதம்பரம் விளக்கினர்.

## கொரில்லா போர் பாணி

அநேக சமயங்களில் அப்படிப்பட்ட பிரதான நபரை அவருக்கு மிக நெருக்கமாக உள்ள ஒரு சிலரைத் தவிர மற்றபடி வேறு யாருக்கும் தெரியாது. கடத்தல் வேலைகளை நடத்த அந்த நபருக்கு ஏராளமான பணவசதி உள்ளது என்பதோடு, கடத்தல் வேலைகள்பெரிதும்கொரில்லா போர் பாணியில் நடத்தப்படுகின்றன. எனவே அவர்களை எதிர்த்துப் போரிடுவது கடினமாகி விடுகிறது என்று அவர் சொன்னர்.

## கடத்தல்காரர்கள் ஒத்துழைப்பு

"நாடுகள் இடையே அரசியல் வித்தியாசங்கள் இருந்தாலும் அவை கடத்தல்காரர்களுக்கு தடையாக இருப்பதில்லை. உதாரணமாக பாகிஸ்தான், இலங்கை ஆகியவற்றைச் சேர்ந்த கடத்தல் காரர்கள் இந்தியாவைச் சேர்ந்த கடத்தல்காரர்களுடன் நட்புறவு கொண்டுள்ளனர். கடத்தலுக்கும் உளவு வேலைக்கும் இடையே நெருக்கமான தொடர்பு உள்ளது. போர் சமயத்தில் கடத்தல்காரர்களும் வேவு வேலைக்குப் பயன்படுத்தப்படலாம்" என்றும் சிதம்பரம் கூறினர்.

## தங்கக் கடத்தல்

"துபாயிலிருந்து பிரதானமாக கைகடிகாரங்களும், டெரிலின், நைலான் துணி ரகங்களும் இந்தியாவுக்குக் கடத்தப்படுகின்றன. லவங்கம், மற்றும் ஏலவிலை அரிய மணிக்கற்களும் இலங்கையிலிருந்து கடத்தி வரப்படுகின்றன. கைத்தறித் துணி, அபினி ஆகியவை இந்தியாவிலிருந்து இலங்கைக்கு கடத்தப்படுகின்றன.

இலங்கையில் தங்கத்தின் விலை இந்தியாவில் உள்ளதைக் காட்டிலும் அதிகமாக இருந்தாலும், பண்ட பேரங்கள் அடிப்படையில் இலங்கையிலிருந்து இந்தியாவுக்கு தங்கம் கடத்தப்படுகிறது" என்றும் சிதம்பரம் சொன்னர்.

இக்கூட்டத்துக்கு ரோட்டரி சங்கத் தலைவர் வி. ஆர். பக்தவத்சலம் தலைமை வகித்தார்.

சிறப்பாகப் பணியாற்றியதற்காக பல்லவன் போக்குவரத்துக் கழகத்தைச்சேர்ந்த ஒரு டிரைவர், கண்டக்டர், செக்கிங் இன்ஸ்பெக்டர் ஆகியோரை ரோட்டரி சங்கம் கவுரவித்தது. ஊனமுற்ற இரு சிறுவருக்கு மூன்று சக்கர சைக்கிள்கள் வழங்கப்பட்டன.

# எம். ஜி. ஆர். பதில்

3-ம் பக்கத் தொடர்ச்சி

றைய அண்ணாவின் தி.மு. கழகத்தினுடைய முக்கிய கொள்கையாக இருந்த திராவிட நாட்டுப் பிரிவினையை எதிரியின் படையெடுப்பிலிருந்து தன்னைக்காத்து இந்தியா வெற்றிபெறும் வரையில் கேட்கமாட்டேன் என்று கூறினரே ஏன்?

காங்கிரசை எதிர்த்துப் போராடிக் கொண்டிருந்த அண்ணா இந்தியாவை காங்கிரஸ் கட்சிதானே ஆள்கிறது நமக்கென்ன—என்று எண்ணவில்லை.

இந்தியாவின் சுதந்திரம் தான் முதலில் காப்பாற்றப்படவேண்டும் அதன்பிறகுதான் மற்றவை எல்லாம். இதைத்தான் அண்ணா அன்று அழுத்தம் திருத்தமாகசொன்னர்.

தனி மனிதனா குடும்பமா என்ருல் குடும்பம்தான் முதலில்.

குடும்பமா கட்சியாஎன்ருல் கட்சிதான் முதலில.

கட்சியா, நாடா என்ருல் நாடுதான் முதலில். இதுதான் அமரர் அண்ணாவின் தீர்ப்பு.

கட்சிப் பிரச்சினைகளை முதலாக்கி வியாபாரம் செய்பவர்களுக்குகூட இது நேரமல்ல.

## கேவலச் செயல்

இந்தியதுணைக்கண்டத்தின் ஜனநாயகம், சர்வாதிகார கொடியவர்களிடம் ஒப்படைக்கப்படக்கூடாது என்ற போராட்டத்தில் இந்திய உழைக்கும் மக்கள் இறங்கியிருக்கிறார்கள். எப்படிப்பட்ட கருத்து வேறுபாடு இருந்தாலும் இன்னொரு கொடியவனோடு போராடும் போது தனது எதிரியின் முதுகிலே குத்துகின்ற கேவலச் செயலை அண்ணா தி. மு. கழகம் நிச்சயமாக ஒரு நாளும் செய்யாது.

அண்ணாவின் சமதர்ம சமத்துவ சமுதாயத்தைஉருவாக்க அண்ணா திமுக மட்டுமல்ல-வேறு எந்தக் கட்சியானுலும் ஒரு சிறிதளவே அவர்களால் செய்யப்படுகிறது என்ருலும் அதற்காக அவர்கள் உண்மை உணர்வோடு சுயநலமின்றி உழைக்கிறார்கள் என்றால் அண்ணா தி. மு. கழகம் அவர்களைப் பாராட்டும்—அவர்களுக்கு உதவும்.

எனவே கருணாநிதி நான் முன்னுக்குப் பின் முரணாக பிரதமரை எதிர்த்தும் ஆதரித்தும் நிச்சயமான நிரந்தரமான கொள்கையின்றிப்பேசுகிறேன்—செயல்படுகிறேன் என்று [illegible] குறைகூறி அவர் மீது தமிழக மக்கள் குற்றச்சாட்டு சுமத்தியிருப்பதை அதே மக்கள் மறந்துவிடுமாறு செய்துவிடலாம் என்ற நம்பிக்கையில் தவருன பாதையில் மீண்டும் மீண்டும் சென்று ஜனநாயக வழியில் மக்கள் தரும்தோல்விகளை ஏற்றுக்கொள்ளும் அவலநிலைக்கு ஆளாக வேண்டாம் என்று அன்போடு தெரிவித்துக் கொள்கிறேன்.

அண்ணா தி.மு.க.வைப் பொறுத்தவரை இன்று இந்தியத் துணைக்கண்டத்தை ஆளுகின்ற மத்திய ஆட்சியினரோடு ஒரு சில கருத்துவேற்றுமைகள் இருக்கலாம். ஆனல் ஏகாதிபத்தியவாதிகள் நமது நாட்டையே அடிமைப்படுத்த முயலும்போது நமக்குள் உள்ள சிறிய வேற்றுமைகளை பெரிதுபடுத்தி எதிரிகளுக்கு நம்மையும், நமது நாட்டையும் பலியாக்க அண்ணா வழியில் நடக்கும் அண்ணா தி.மு. கழகம் ஒரு போதும் இடம் தராது!' என்ருர் எம். ஜி. ஆர்.

# காமராஜ் பிறந்த நாள் விழா: சிவாஜி கணேசன் கலந்துகொள்கிருர்

சென்னை, ஜூன் 18—பழைய காங்கிரஸ் தலைவர் காமராஜரின் 73-வது பிறந்த நாள் விழா இந்த ஆண்டு தஞ்சையில் நடத்தப்படுகிறது. சிவாஜி கணேசன் இந்த விழாவில் கலந்து கொள்கிருர்.

ஜூலை 15-ம் தேதியன்று காமராஜ் பிறந்த நாளாகும்.

தஞ்சை மாவட்ட பழைய காங்கிரஸ் தலைவர் கருப்பையா மூப்பனர் விழா ஏற்பாடுகள் குறித்து இன்று நிருபர்களிடம் கூறினர்.

ஜூலை 14-ம்தேதி கவியரங்கம், கருத்தரங்கம நடத்தப்படும் என்றும், 15-ம் தேதி விழாவில் காமராஜரிடம் ரூ. 5 லட்சம் தேர்தல் நிதி தரப்படும் என்றும் கருப்பையா மூப்பனர் தெரிவித்தார். விழாவில் சிவாஜி கணேசன், கண்ணதாசன் ஆகியோர் கலந்து கொள்கிருர்கள்.

14-ம் தேதி மாலையில் மாவட்ட எல்லையிலிருந்து காமராஜர் ஊர்வலமாக அழைத்துச் செல்லப்படுவார் என்றும் அவர் கூறினர்.

15-ம் தேதி நடைபெறும் ஊர்வலத்தில் மாநிலம் முழுவதிலும் இருந்துவந்து காங்கிரஸ தொண்டர்கள் கலந்து கொள்வார்கள் என்று அவர் கூறினர்.

ஊர்வலத்தில் 5 லட்சம் மக்கள் கலந்து கொள்வர் என்று எதிர் பார்க்கப் படுவதாகவும் அவர் தெரிவித்தார்.

காமராஜர் பிறந்த நாள் விழா சம்பந்தமாக காங்கிரஸ் தலைவர் ராமச்சந்திரன் வெளியிட்ட அறிக்கைஒன்றில் விழாவை சிறப்பாகக் கொண்டாடுமாறு காங்கிரஸ்தொண்டர்களைக் கேட்டுக் கொண்டுள்ளார். அந்த நேரத்தில் காங்கிரசுக்கு உறுப்பினர் சேர்க்கும் பணியில் தீவிரமாக ஈடுபடும்படியும் ராமச்சந்திரன் வேண்டிக் கொண்டுள்ளார்.

விட்டுப்போனவர்களுக்கு

# சில நாட்களில் ரேஷன் கார்டு

சென்னை, ஜூன் 18— ரேஷன் கார்டு கிடைக்காமல் விட்டுப் போனவர்களுக்கும் இன்னும் சில நாட்களில் ரேஷன் கார்டுகள் வினியோகிக்கப்படும் என்று சிவில் சப்ளை அதிகாரி ஒருவர் கூறினர்.

ரேஷன் கார்டு கிடைக்காமல் போனவர்கள் ஜூன் 1 முதல் ஜூன் 7-ந் தேதி வரை அளித்த மனுக்களின் அடிப்படையில் கணக்கெடுப்பு முடிந்து விட்டது. அவர்களுக்கான கார்டுகள் தயாராகிவிட்டன. அடுத்த சில தினங்களில் கார்டுகள் அவர்களுக்கு வினியோகிக்கப்பட்டுவிடும் என்ருர் அவர்.

பழைய ரேஷன் கார்டுகள் ஜூன் 15-ந் தேதியுடன் காலாவதியாகிவிட்டதால், ரேஷன் கார்டு கிடைக்காதவர்களுக்கு இம்மாத பிற்பகுதியின் ரேஷனும் கிடைக்காமல் போய்விடாதபடிதடுப்பதற்காக விரைவில் அவர்களுக்கு கார்டுகள் வழங்கப்படும் என்று அவர் சொன்னர்.

அவர் மேலும் கூறுகையில் நகரில் 6 லட்சம் குடும்பங்களுக்கு புதிய ரேஷன் கார்டு வழங்கும் வேலை அநேகமாக முடிவடைந்துவிட்டது என்ருர்.

கணக்கெடுப்பின்போது கணிசமான அளவுக்கு போலி ரேஷன் கார்டுகள் கண்டு பிடிக்கப்பட்டதாக அவர் சொன்னர். ரேஷன் கார்டுகள் அடகு வைத்திருப்பதும் கண்டுபிடிக்கப்பட்டதாக அவர் கூறினர்.

நடத்தையில் சந்தேகம்!

# மனைவி படுகொலை: அதிகாரி கைது

குடந்தை, ஜூன் 18— மனைவியை அரிவாள் மணையால் கழுத்தில் வெட்டிக் கொலை செய்ததாக கும்பகோணம் அருகேயுள்ள திருவிழிமிழலை ஆரம்ப சுகாதார நிலையத்தின் சுகாதார அதிகாரி ராமலிங்கம் என்பவரை பாலையூர் போலீசார் கைது செய்தனர். மனைவி சுவர்ணத்தின் நடத்தையில் சந்தேகப்பட்டு, அவர் நள்ளிரவில் கொலை செய்தாராம். அவர்களுக்கு இரு ஆண் குழந்தைகளும் ஒரு பெண் குழந்தையும உள்ளனர். போலீசார் புலன் விசாரித்து வருகின்றனர்.







விடுதலை செய்யக்கோரி

# ஹைகோர்ட்டில் வழக்கு

சென்னை, ஜூன் 18— தன்னை கோர்ட்டில் ஆஜர்படுத்தி விடுதலை செய்யவேண்டும் என்று கோரி விருது நகர் வியாபாரியான மனோகரன் சென்னை ஹைகோர்ட்டில் வழக்குப் போட்டுள்ளார்.

நீதிபதி எஸ். சூரியமூர்த்தி நீதிபதி வி. பாலசுப்பிரமணியம் ஆகிய இருவரும் இந்த வழக்கு மனுவை விசாரணைக்குஏற்றுக்கொண்டு ராமநாதபுரம் கலெக்டருக்கு நோட்டீஸ் அனுப்ப உத்தரவிட்டனர்.

தனியாவில் கலப்படம் செய்ததாக வியாபாரி மனோகரன் "மிசா" சட்டத்தின்கீழ் கைதுசெய்யப்பட்டு காவலில் வைக்கப்பட்டுள்ளார் குற்றச்சாட்டுகள் தெளிவாக இல்லை என்றும் குற்றம் என்ன என்பதும் தீர்மானிக்கப்படவில்லை என்றும் அவர் தனது வழக்கில் கூறியுள்ளார். தன்னைக் காவலில் வைத்தது தவறு என்றும் தன்னை விடுதலை செய்ய வேண்டும் என்றும் அவர் கோரியுள்ளார்.

# சாதிக்பாட்சா - தொழிலதிபர்கள் சந்திப்பு

சென்னை, ஜூன் 18—தமிழ் நாட்டில் கூட்டுத் துறையில் ஆரம்பிக்கப்படும் தொழிற் சாலை திட்டங்களில் சேர்ந்துள்ள தொழிலதிபர்களை தொழில்மந்திரி சாதிக்பாட்சா நேற்று சந்தித்து முக்கிய ஆலோசனை நடத்தினர். அவர்களுடைய பிரச்னைகளை அமைச்சர் கேட்டு தெரிந்து கொண்டார். இன்று நிதி நிறுவனங்களின் பிரதிநிதிகளுடன் அவர் ஆலோசனை நடத்துகிறார்.



# பாங்கு கொள்ளையனை துரத்திப் பிடித்த பாங்கு அதிகாரி

பெல்லாரி, ஜூன் 18— கொள்ளையன் ஒருவன் பாங்கில் புகுந்து துப்பாக்கியைக் காட்டி மிரட்டி ரூ 10 ஆயிரம் பணத்தைக் கொள்ளையடித்துக்கொண்டு ஓடினன். பாங்கு மேனேஜரும் குமாஸ்தாவும், சப்பந்தி ஒருவரும் அவனை துரத்திச் சென்று பிடித்தனர்.

இச்சம்பவம் பெல்லாரி நகரில் நடந்தது.

அந்த நபருக்கு 30 வயது இருக்கும் அவன் கைத்துப்பாக்கியுடனும், 6 அங்குலக் கத்தியுடனும் பாங்கில் நுழைந்து திடீரென்றுஉள்ளே பாய்ந்து கையில் கிடைத்த பணத்துடன் ஓட ஆரம்பித்தான்.

அப்போது அங்கிருந்த கே. எம் சங்கேஷ் என்னும் பாலிடெக்னிக் ஆசிரியர் அக்கொள்ளையனை பிடிக்க முயன்றார். உடனே அவன் அவரை நோக்கி இருதடவை துப்பாக்கியால் சுட்டுவிட்டுத் தப்பினன். இதனல் அவருக்குப் குண்டு காயம் ஏற்பட்டது.

கொள்ளையன் ஓட ஆரம்பித்த உடனேயே பாங்கு மானேஜர் கே. எஸ். ஆச்சாரியா, குமாஸ்தா கே. பி. நாயக் மற்றும் ஓர் அட்டெண்டர் ஆகியோர் வெளியே ஓடி அவனைத் துரத்த ஆரம்பித்தனர். கொள்ளையன் இவர்கள் தன்னை நெருங்காமல் இருக்க கைத் துப்பாக்கியால் சுட்டுக் கொண்டே சென்ருன். இதில் பாங்கு குமாஸ்தா காயமடைந்தார். கொள்ளையன் ஓடும்போது பணத்தை கீழே போட்டுவிட்டு ஓடினன். கடைசியில் அவன் 'ஓட்டல் மயூர்' அருகேபிடிபட்டான் அவ்வழியே சென்ற போலீஸ் சூபரின்டெண்டிடம் அவன் ஒப்படைக்கப்பட்டான். ரோடில் அவன் போட்டுவிட்டு ஓடிய பணம் கைப்பற்றப் பட்டது

குண்டு காயம்பட்ட பாலிடெக்னிக் ஆசிரியரும் பாங்கு குமாஸ்தாவும் ஆஸ்பத்திரியில் சேர்க்கப்பட்டனர். அவர்களுடைய உயிருக்கு ஆபத்து எதுவும் இல்லை

கொள்ளையன் யார் என்ற என்ற விவரம் இன்னும் தெரியவில்லை. போலீசார் புலன் விசாரணை நடத்திவருகின்றனர்.

Printed by S. V. G. Sowrirajulu at the M. C. P. P. S. Press. No 4 South bank Road, Madras-28, and Published by him for the Madras Co-operative Printing and Publishing Society Ltd

Editor-in-charge : G. Dhanaraj.